# முகநூல் இதழ் நவம்பர் 2023

NOV 2023 FB Postings

நவ 30

1936ல் காந்தியம் குறித்த சுவையான மிகப் பொறுப்பான விளக்கம் ஒன்றை காந்தியே தர நேர்ந்தது.

காந்தி சேவா சங்க அமர்வில் காந்திய சிந்தனைகளை எடுத்துச் செல்ல கமிட்டி ஒன்று காகா கலேல்கர் தலைமையில் உருவாக்கப்பட்டிருந்தது. அதில் தர்மாதிகாரி, மகாதேவ தேசாய், மஷ்ருவாலா, சுவாமி ஆனந்த், திவாகர், ஹரி உபாத்யாயா, ராஜேந்திரபிரசாத் , சங்கர் ராவ் , பட்வர்த்தன் உள்ளிட்டு இன்னும் சிலரும் இருந்தனர்.

இதை அறிந்த காந்தி காந்தியம் என ஏதுமில்லை என்று அவர்களிடம் தன் விளக்கத்தை தந்தார். அவ்வரிகளிலிருந்து

I have conceived no such thing as Gandhism. I am not exponent of any sect..I could not presume to vie with the ancient law givers..The right to codify my thoughts cannot belong to me. Whatever is lasting will take shape after I am gone.

Without elaborate scheme I have simply tried in my own way to apply eternal principles of truth and non violence to our daily life and problems..All that I have written is but a description of whatever I have done. And my actions alone are the greatest expression of truth and non violence.

Those who believe in these can propagate them only by following them in practice

ஒரு முறைக்கு இருமுறை படித்தால் எளிதில் விளங்கிவிடும். ஆனால் காந்திய நடைமுறைக்கு பெரும் பயிற்சி தேவைப்படும். முற்றிலுமாக ஒருவர் தன் limitation புரிந்து ஜீரோ ஆக்கிக்கொள்ளும் நிலை தேவைப்படும். நம்மிடம் பெரும்பாலும் ஹீரோ ஆகும் பிரயத்தனங்கள்தான் அதிகமாக இருக்கின்றன. படபடப்பும் ஆரவாரங்களும்தான் தூக்கலாக தெரிகின்றன.

மார்க்ஸ் கூட alas I am not a Marxist என்றே சொன்னார்..

————————————————————————————————

Turn Searchlight Inwards

1938-39 களில் காங்கிரசில் பல அமைப்பு பிரச்சனைகள் உருவாயின. தொழிற்சங்கங்களை காங்கிரஸ் உறுப்பினர் அந்தஸ்தில் இணைத்துக்கொள்ளலாமா என்பது கேள்வியானது. காங்கிரசில் அதன் கொள்கை ஒழுங்கு விதிகளை ஏற்ற தனிநபர்கள் individuals உறுப்பினர்கள் ஆகலாம்- corporate membership அமைப்பே affiliate செய்துகொள்தல் வேண்டாம் என முடிவானது.

அடுத்த கேள்வி தனியாக விவசாய ஸ்தாபனங்கள் வேண்டுமா- காங்கிரசே அடிப்படையில் அந்த குணம் கொண்டது தானே என்ற விவாதம் வந்தது. படேல் கூட தனியாக விவசாய அமைப்புகள் தேவையா என்ற கருத்தில்தான் இருந்தார். காந்தி தனி அமைப்பு இருப்பதில் தவறில்லை என்றார். ஆனால் காங்கிரசில் தனி அந்தஸ்து பெயரில் , காங்கிரஸ் கொள்கைக்கு மாறான நிர்ப்பந்தங்களை அவை ஏற்படுத்தக்கூடாது என்றார்.

அனைத்திற்கும் மேலாக 1937 காங்கிரஸ் ஆட்சி அக்கட்சியில் கொணர்ந்த குணக்கேடுகள் விவாதிக்கப்பட்டன. 1939 ல் இது நல்ல விவாதமானது. Internal decay உள்ளே அழுகி நிற்கும் நிலை என்கிற விவாதம் வழியே காங்கிரசிற்கு காந்தி அறிவுரைகளை தந்தார். அன்று காங்கிரசிற்கு தரப்பட்ட ஒன்று என்றாலும் எந்த அமைப்பிற்கும் அவை பொருந்தக்கூடிய ஒன்றேயாகும். காந்தி எழுதிய சில வரிகள்

It looks as if Congressmen are not able to digest the power that has come to the Congress. Everyone wants to have a share in the spoils of office. And so there is an unhealthy competition to capture committees.

Rome's decline began long before it fell. The congress, which has been nursed for over fifty years by the best brains of the country, will not fall the moment it has begun to decay. It need not fall at all, if the corruption is handled in time.

I see clearly that the Congress is going downward each day. Selfishness, infighting, untruth and violence have crept into the Congress and are on the increase. I fear we are destroying ourselves because of our inner failures. Let us see what God wills.

இது அன்று காங்கிரசிற்காக சொல்லப்பட்டிருக்கலாம். இன்றும் அக்கட்சிக்கு மட்டுமல்ல, எந்த அமைப்பிற்காகவும் நற்சிந்தனையுடன் பார்த்தால் பொருந்தக்கூடியதே. Our inner failures destroying ourselves என்ற புரிதல்

இல்லையென்றால் , எந்த அமைப்பின் downfall யையும் தடுக்கமுடியுமா எனத் தெரியவில்லை.

எப்போதும் எதற்கும் பிறரை சுட்டி குறை சொல்லிவிட்டு, சூழல்களை சபித்துவிட்டு, உள் தோல்விகளை குறைகளை மனப்படுத்திக்கொள்ளாமல் போகும் தனிநபரானாலும்/ அமைப்பானாலும், அது அமைப்பின் வீழ்ச்சியாக மட்டுமல்லாது destroying ourselves நம் ஒவ்வொருவரின் வீழ்ச்சியாகவும் முடியலாம்.

காந்தியின் புகழ் வாய்ந்த சொற்றொடர் Turn Searchlight Inwards

நவ 30 ( 2022ன் மறு இடுகை)

டிசம்பர் 6 வந்தால் 1992 நிகழ்வுகளின் உளவியல் நாட்டில் பேசப்படும் பொருளாகும். மதவிவகாரங்களில் religious sentiments மிக கவனமாக கையாளப்படவேண்டாமா என்கிற கேள்வியும் கூடவே பிறக்கும்.

அத்வானி அவர்களின் My Country My Life என்கிற பெரும் புத்தகத்தில் 6 ஆம் அத்தியாயம் அயோத்தியா இயக்கம் என்ற பொருளில் ஏறத்தாழ 80 பக்கங்களுக்கும் மேலாக விவாதிக்கப்பட்டிருக்கும். அவர் கட்சி தரப்பு நியாயங்களை அடுக்கி சொல்லியிருப்பார். சாரமாக அவர் எழுப்பின முக்கிய கேள்வி இந்துக்களின் மத உணர்வுகளுக்கு இந்த நாட்டில் மதிப்பில்லாமல் போகலாமா..

Religious sentiments என்பது ஒவ்வொரு மதத்திலும் அதை சார்ந்தவர்களிடம் இருக்கவே செய்கிறது. அவர்களின் நம்பிக்கையை அலட்சியம் செய்யும்போதும், கேலி செய்யும்போதும், அவமரியாதை செய்யும்போதும் இந்த sentiments தீவிரமாகும் அல்லது தீவிரப்படுத்தப்படும். பிற எல்லா மதத்தினருக்கும் இருப்பதைப்போன்ற religious sentiments இந்துக்களுக்கும் அத்வானி சொல்வது போல் இருப்பதில் அல்ல பிரச்னை. தான் சாராத பிற மத sentimentsயை கேலி செய்வது பிரச்னையாவது போலவே ஒருவர் இந்து மத sentimentsயையும் காயப்படுத்துவது அவசியமில்லை எனவும் புரிந்துகொள்ளலாம்.

இங்கு எவையெல்லாம் religious sentiments என்பதற்கு ஏற்கப்பட்ட பொதுப்பட்டியலோ definition ஓ இருக்கவில்லை. பொதுப்புத்திக்கு ஏற்புடைய சில அம்சங்கள் என எடுத்துக்கொள்ளலாம். நம்பிக்கை சார்ந்த அம்சங்களை காயப்படுத்தாமல் இருப்பது என சுருக்கமாக புரிந்துகொள்ளலாம்.

ஒரு விஷயத்தில் நம்பிக்கையில் ஒரே இடம் சார்ந்து ஒரே நேரத்தில் இரு மதங்களுக்கு இடையிலேயோ அல்லது பல மதங்களுக்கு இடையிலேயோ ஏற்படும் அல்லது ஏற்படுத்தப்படும் religious sentiments யை எப்படி அமைதிவழியில் தீர்த்துகொள்வது என்பதுதான் வந்திருக்கும் பிரச்னையே தவிர எம்மதக்காரருக்கும் இருக்கும் religious sentiments அல்ல பிரச்னை.

மரியாதைக்குரிய அத்வானி அவர்கள் இப்புத்தகத்தின் முதல் 450 பக்கங்களில் religious sentiments என வந்துவிட்டால் அதில் dispute எழுந்துவிட்டால் அதை பெரும்பான்மை மத sentimentsக்கு ஆதரவாக தீர்க்கப்படவேண்டும் என்கிற எதிர்பார்ப்பையே தருகிறார்.

அவரவர் sentiments அவரவர்க்கு என்பதில் பிரச்னையில்லை. ஒரே நேரத்தில் ஒரு குறிப்பிட்ட இடத்திற்கான உரிமைகோரலில் ஏற்படும் religious sentiments religious belief என்பதை மத ஸ்தாபனங்கள் அமைதியான வகையில் பேசி தீர்த்து வழிகாணமுடியாமல் போனால் என்ன செய்வது என்பதுதான் constitution வழிபட்ட Indian polity முன் நிற்கும் பெரும் சவால்.

Indian polity என்பதெல்லாம் 1947 க்கு பின்னால் வந்த ஏற்பாடு, இங்கு 5000 ஆண்டுகளாக இருந்து வருவது Hindu polity தான் என்று territorial national state என்ற ஒன்று இல்லாததுபோல் கருதி, இருப்பெதெல்லாம் இருந்ததெல்லாம் Hindu civilisational State தான் என்ற கருத்து அரசியலாக 1992க்கு பின்னர் தீவிரமாக்கப்பட்டுவருகிறது.

கடந்த 1000 ஆண்டுகளில் ஏற்பட்ட மத்தியகால வரலாறு முழுவதும் திரிபு என்றும் அது இந்திய வரலாற்றின் பகுதியாக கருதக்கூடாது என்பதும் தீவிரமாக்கப்பட்டு வருகிறது. Composite culture என்று பேசினால் அப்படிப்பேசி இந்தியாவின் நீண்ட சரடான Hindu civilisational culture என்பதை நீங்கள் மூடிவிடுகிறீர்கள் என்ற குற்றசாட்டு பலப்படுத்தப்பட்டு வருகிறது.

தொன்மை வாய்ந்த இந்தியாவின் வரலாற்றைக் கட்டமைப்பது என்பது பெரும் போராட்டக் களமாக மாற்றப்பட்டுள்ளது. மேற்கிலிருந்து அவர்கள் செல்வாக்கிலிருந்து விடுபட்டு என் மூளையால் என்னை சிந்திக்கவிடு என் மொழியால் என்னை பேசவிடு எனும் sentiments தீவிரமாக்கப்பட்டுவருகின்றன.

நவ 29

Milestones-இந்திராணி ஜெகஜீவன்ராம்

திருமதி இந்திராணி அம்மையார் தனது வாழ்க்கை குறித்த நினைவுக்குறிப்புகளில் இந்திய விடுதலைபோராட்டக் காலத்தின் சில கட்டங்களையும் சொல்லியே நகர்கிறார்.

ஜெகஜீவன் கல்விச் சூழலில் தீண்டாமை எதிர்த்து போராடியது, ரவிதாஸ் இயக்கம் தொடங்கி இளைஞர்களை அணிதிரட்டியது, இந்து மகாசபை மாநாடுகளில் தலித் மக்களின் நலனுக்கான தீர்மானங்களை கொணர்வது , முனிசிபல் மற்றும் 1935 சட்டப்படியான தேர்தல்களில் பாபு ஜெகஜீவன் பங்கேற்றது குறித்து இந்திராணி சொல்லிச் செல்கிறார்.

ஜெகஜீவன் குடும்பத்தில் தாயாரும் அண்ணிமாரும் துளசிதாசர் பஜன்களை ஊராருடன் பாடுவது, பக்தி மார்க்கத்தில் ஈடுபாட்டுடன் இருந்ததைக் குறிப்பிடுகிறார்.

வட்டமேஜை மாநாடு துவங்கி 1937 காங்கிரஸ் வெற்றி -அமைச்சரவை காலத்தில் அவர் பதிவு செய்த மூன்று முக்கிய அம்சங்களை இங்கு தந்துள்ளேன். காந்தியுடன் பிரசாத் வழியாக பயணித்தல், காந்தியுடன் வேறுபாட்டை சொல்தல், அம்பேத்கருடன் முரண்படுதல் அவரை சந்தித்து இணக்கமாதல், பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் இணங்குவதா முரண்படுவதா போன்ற அம்சங்களில் இந்திராணி பதிவை தந்துள்ளேன்.

பிரிட்டிஷ் பிரதமராக இருந்த ராம்சே கொடுத்த 1932 கம்யூனல் அவார்ட், அதில் தனித்தொகுதி என்பது depressed class பகுதியை இந்துக்களிடமிருந்து பிரித்துவிடும் என்பதற்கான காரணங்களைச் சொல்லி காந்தியின் உண்ணாவிரதம், புனே உடன்பாடு ஆகியவற்றை இந்திராணி சொல்கிறார். அவர் தன் பதிவை கீழ்கண்டவாறு தந்துள்ளார்.

The British backed him ( dr Ambedkar) against Gandhi in order to spread disunity in the nationalist movement, but the general public was highly agitated. Gandhiji was a symbol of freedom for the common man.

அடுத்து ஜெகஜீவன் அறிக்கை ஒன்றை சுட்டும் பதிவு

The All India Dalit Varga Sangh had gained prominence as a representative of Harijan body. Dr Ambedkar felt that it had become a challenge to his leadership.Jagajivan said that it is sad that a brilliant person like Dr Ambedkar is separating from Dalit varga movement, but we are happy that Hindu society will not be divided.

ஜெகஜீவன் புனேயிலிருந்து பம்பாய்க்கு அம்பேத்கரை பார்க்கப்போனார். பரஸ்பர மரியாதையுடன் உரையாடல் இருந்தாலும், இந்து மதத்திலிருந்து மாறவேண்டிய அவசியத்தை அம்பேத்கர் வலியுறுத்தினார். தலித் பிரச்சனைகளை மதமாற்றத்தால் தீர்க்கமுடியாது என்கிற தன் முடிவை ஜெகஜீவன் தெரிவித்து திரும்பியதாக இந்திராணி எழுதியுள்ளார் ( பக் 51)

இங்கு இந்திராணி எழுதியிருக்கும் மற்றொரு வரி

Dr Ambedkar’s call for conversion made him the centre of attraction in the entire Indian social set up.

காந்தியிடம் ஜெகஜீவன் ‘ஹரிஜன்’ என்ற பெயரை ஏற்கவில்லை என்றார். அப்பெயர் தொடர்ந்து தனி அடையாளத்தையே தந்துகொண்டிருக்கும் என வாதிட்டார். இந்திராணி எழுதியிருப்பது

Jagajivan did not like the nomenclature of Harijans for untouchables. He said a new name would set them apart from the mainstream. He criticised the patronising attitude of Caste Hindus.

நாங்கள் இரட்சகர்கள் என்று வந்து எங்களுக்கு மேல் நின்று பேசுகின்ற சாதி இந்துக்கள் மீது இளம் ஜெகஜீவனுக்கு கடும் விமர்சனம் இருந்தது. அவர் சங்கராச்சாரியார் உடன் மோதியபோது, மாளவியாவும் ஜெயகரும் துணையாக நின்றதாக இந்திராணி சொல்கிறார்.

ராஜேந்திர பிரசாத் ஜெகஜீவனிடம் மூன்று அம்சங்களுக்கு விளக்கம் கேட்டு show cause notice கொடுத்தாராம். ஏன் ஹரிஜன் பெயர் வேண்டாம், சாதி இந்துக்கள் குறித்து விமர்சனங்கள், அம்பேத்கர் பணிகளை மெச்சி பேசி வருவது என்பன அந்த அம்சங்கள். ஜெகஜீவன் என்ன பதில் கொடுத்தார் என்பதைச் சொல்லாமல் அடுத்த நிகழ்விற்கு இந்திராணி சென்று விடுகிறார்.

1935 இந்திய அரசாங்க சட்டப்படி 1937 மாகாண தேர்தல்களில் பங்கேற்ற காங்கிரஸ் வெற்றி பெற்றது. ஆட்சி அமைக்கும் முடிவெடுக்க தாமதமான சூழலில்

ஆங்காங்கே தற்காலிக அரசாங்க முயற்சியை பிரிட்டிஷ் கவர்னர்கள் - அதிகாரிகள் எடுத்தனர். பீகாரிலும் இம்முயற்சி நடந்தது. காங்கிரஸ் 'டிக்கட்டில்' வெற்றிபெறாதவர்களைக் கொண்டு அரசாங்கம் என பிரிட்டிஷார் முயற்சித்தனர். பீகாரில் ஜெகஜீவன் தலித் வர்க்க சங்கம் சார்பில் சட்டமன்றத்திற்கு தேர்வாகியிருந்தார்.

இந்திராணியிடம் வந்து பிரிட்டிஷ் அதிகாரிகள் மந்திரியாகிட தன்னை அணுகியதாகவும், பங்களா நல்ல வாழ்க்கை அமையும் என்ன செய்ய என்று ஜெகஜீவன் கேட்கிறார். அதற்கு இந்திரா கூடவே கூடாது- அது தேச துரோகமாகிவிடும் - பணம் பங்களா இல்லாமல் வாழமுடியும் என்கிறார். நீ இப்படி சொல்வாய் என்றுதான் வேண்டாம் எனச் சொல்லிவிட்டேன் என்கிறார் ஜெகஜீவன் .

இந்திராணி வரிகள்

" Don't do it. It will be a great betrayal to the nation. I don't crave for money or comfort

இந்திராணி சரியான நேரத்தில் பிரிட்டிஷ் பிரித்தாளும் அரசியலில் இளம் ஜெகஜீவன் தடுக்கி விழாமல் காத்து நின்றதைக் காண்கிறோம்.

நவ 29

Salute to the great Rescue team..workers started coming out at Uttarkasi Tunnel

Let their ordeal end with that. Wishing them good health

நவ 28

Com Mohit sen wrote so

(EPW dec 13, 1969 Triple strategy for left prescribed)

First the left should build up its own independent strength and establish maximum possible unity of all its forces including those in Indira congress.

second -it must come out as the foremost and most effective opponents of the right coalition

Third-Unity as well as struggle with Indira Cong for implementation of a minimum program of national rejuvenation"

Com Dange spoken so in the Internatioanl Conf at Moscow June 1969

Everybody now realises that the last days of Congress monopoly of power at the center have arrived and he said further the alternative of the coming power structure at the national level was either a leftist and democratic front forged in time to take over power or a reactionary combination of right wing parties and groups.

நவ 28

சாவர்க்கர் குறித்த பெரிய அளவிலான வரலாற்று புத்தகம்தான் தனஞ்செய் கீர் எழுதியது. மல்லுக்கட்டி படித்து முடிக்க முடிந்தது.

அவரின் புகழ்பாடலாக 600 பக்கங்களில் அது எழுதப்பட்டிருந்தாலும், அவர் குறித்த விமர்சன வரிகளும் இறுதிப் பகுதியில் சிறிதளவு வருகின்றன. அவர் சற்று கஞ்சன் என்ற குற்றச்சாட்டு அவர் மீது உண்டு. இதை சாவர்க்கர் குறித்து ஆய்வு செய்த விக்ரம் சம்பத்தும் சொல்லியுள்ளார்.

அந்தமான் சிறை வதை தனிமை, அவரை பெரிய அளவு மாற்றிவிட்டது. லண்டனில் அவருடன் நெருக்கமாக இருந்தவர்கள், இந்து மகாசபாவில் முன்னணியில் நின்றவர்களுடன் கூட உறவு இல்லாமல் போனது. வீட்டிற்கு வந்தவர்கள் கூட அவரை பார்க்க முடியாமல் மனம் வருந்தி திரும்பிய நிகழ்வுகள் உண்டு. இந்து மகாசபா முக்கியத்தலைவர் பாய் பரமானந்திற்கே இந்த நிலைமை ஏற்பட்டது. ஜெனரல் கரியப்பா, ஆர் எஸ் எஸ் கோல்வால்கர் பார்க்க முடியாமல் திரும்ப அனுப்பட்டனர்.

அவரது தியாகம், எழுத்தாற்றல், பேச்சாற்றல், இலக்கிய பயிற்சி, இந்துத்துவ அரசியல் மூர்க்கம், போர்க்குணமிக்க இந்து ராஜ்ய சிந்தனை, முஸ்லீம்கள் மீதான பெரும் அவநம்பிக்கை இவற்றுடன் ஒத்துப்போகிறவர்கள் கூட, அவருடன் சிரித்து மகிழ்ந்து நட்பு பாராட்ட முடிந்ததில்லை. எல்லாவற்றிலும் கறார் தன்மை அவரிடம் தொழிற்பட்டது.

அவரின் படுக்கை - வசிக்கும் அறை எப்போதும் அழுக்காக இருந்தது. சீனிவாச சாஸ்திரி சாவர்க்கர் வீட்டிற்கு சென்றபோது, ஏன் இப்படி அந்தமான் சிறையைவிட மோசமாக வாழ்கிறீர்கள் என நொந்துகொண்டாராம்.

தனஞ்செய் எழுதுகிறார் - சாவர்க்கர் moody erratic, no warmth towards party men and followers, his attitude may not please anyone, highly cold and disinterested mental make up,

பேட்டி எடுக்க வருகின்றவர்களிடம் உள்நாடோ, வெளிநாடோ எவரிடமும் சகஜம் இருக்காது.

நேரு கூட moody எனப் பெயர் வாங்கினார் - ஆனால் அவர் எப்போதும் friendly ஆக இருக்கத்தெரிந்தவர். ஒருபோதும் erratic ஆக நடந்ததேயில்லை. அவரை சுற்றி எப்போதும் மனிதர்கள் இருந்தார்கள்.

சாவர்க்கர் வீட்டில் உணவை சமைத்து வைத்துக்கொண்டு மனைவி யமுனா காத்திருக்கவேண்டும். சுவை பற்றி ஏதும் பேசமாட்டார். எது போட்டாலும் சாப்பிட்டு போய்விடுவார். பயணம் கூட்டங்களில் வருத்த மீன், சில நேரம் மட்டன், முட்டை கறி பிடித்து சாப்பிடுவார். சிகரெட் பிடிக்கமாட்டார். லண்டனில் ஒயின் பழகியிருந்தார். வயது மூப்பு காலத்திலும் கொஞ்சம் விஸ்கி எடுத்துக்கொண்டார்.

நேரு , ஆசாத் கூட சிகரெட் பிடிப்பர். ஆசாத் காந்தியைப் பார்த்து கீழே எல்லம் போடமாட்டார். கிருபளானி இதைச் சொன்னபோது, காந்தியின் தொண்டர்கள் சிகரெட்டெல்லாம் பிடிப்பார்களா என்று ஆச்சர்யம் அடைந்தவர் உண்டு என கிருபளானி சொல்லியுள்ளார்.

சாவர்க்கர் இரவு விழித்தாலும் விழிக்காவிட்டாலும் காலை 7 மணிக்குத் தான் எழுந்திருப்பார். ஏராள நாளிதழ்களை வாசிப்பார். மதியம்தான் குளிப்பார். விவாதங்களில் எவரையும் spare செய்வதில்லை. இந்து மகாசபையில் பலருடன் அவ்வப்போது மோதிக்கொண்டார். மகாசபை அடிப்படை உறுப்பினர் என்பதைக் கூட ராஜினாமா செய்தார். காங்கிரஸ் மற்றும் சோசலிஸ்ட்கள் ஆரம்பத்தில் வரச்சொல்லி அழைத்ததை ஏற்க மறுத்தார்.

மார்க்சிய லெனினிய சோசலிச புத்தகங்கள் அவரது அறையில் இருந்தன. லெனினை படித்துள்ளீர்களா என்ற கேள்விக்கு, லெனின் என் புத்தகத்தை ( 1857 புரட்சி பற்றிய) படித்தாரா என எதிர் கேள்வி கேட்டார். 'செம ஈகோ' உள்ளவராக இருந்தார். ஜின்னா நான் வயதில் மூப்பானவர் இல்லையா , சாவர்க்கர் என்னை வந்து பார்க்கட்டும் என்றபோது, தியாக வாழ்வில் தான் மூத்தவன் - ஜின்னா வந்து பார்க்கட்டும் என்ற பதிலை சாவர்க்கர் தந்துள்ளார். பல்லாண்டுகளாக நேரிடையாக அறிந்த காந்தியை வாய்ப்பு கிடைத்த போதெல்லாம் விமர்சித்து வந்தார். லண்டன் சந்திப்பிற்கு 20 ஆண்டுகளுக்கு பின்னர் 1927 ல் அவர்கள் இருவரும் சந்தித்து தோழமையான உரையாடலை நடத்தினர். காந்தி படுகொலை விஷயத்தில் அவர் விடுதலையானாலும், moral question haunts என அவரின்

ஆய்வாளரான விக்ரம் சம்பத்தே ஏற்றுள்ளார். பொதுவாக சாவர்க்கர் நண்பர் என எவரையும் வைத்துக்கொள்ளவில்லை.

ராஜ்ய சபாவில் அம்பேத்கர் ஆகஸ்ட் 24, 1954 விவாதம் ஒன்றில் நேருவின் பஞ்சசீலத்தை தாக்கிப்பேசியதை குறிப்பிட்டு சாவர்க்கரிடம் சொன்னபோது, சீனாவின் மாவோவிற்கு பஞ்ச சீலத்தில் நம்பிக்கை கிடையாது. நேரு ஏமாறுவார் என்றாராம்.

ஜனவரி 29, 1953 backward class கமிஷன் அமைக்கப்பட்டது. 1954ல் ஆலோசனையாக " abolition of untouchability should be enforced by a very ruthless law- cognizable offence என எழுதியிருந்தார்.

இறந்தவுடன் மாபெரும் சுதந்திர வீரன் என எழுதி வைக்க வேண்டுமா என்று கேட்டதற்கு, அதெல்லாம் வேண்டாம்- 'இந்துக்களை திரட்டியவர்' என எழுதி வைப்பீர் என்று சாவர்க்கர் பதில் சொல்லியுள்ளார்.

1957 ல் சிப்பாய் புரட்சியின் நூற்றாண்டில் ஏற்பாட்டாளர்களால் சாவர்க்கர் அழைக்கப்பட்டார். பிரதமர் நேருவை தாங்களும் கலந்துகொள்ளவேண்டும் எனக் கேட்டனர். நேரு வர இயலாமைக்கான காரணத்தை பக்குவமாக வெளிப்படுத்தியுள்ளார். இது குறித்த தனஞ்செய் வரிகள் ( பக் 500)

" Nehru said Savarkar is a brave man, a hero, a great man. When I was a student in England we were inspired by his book on 1857. It is a great book inspired many Indians. But it is hardly history. We have differed on several problems and it would be embarrassing to him if I speak in a different tone.

I have great respect for Savarkar and I would have certainly linked to meet him. But speaking on the same platform would be unjust for both of us"

பிபின் சந்திரபால் மகன் நிரஞ்சன்பால் சாவர்க்கரின் இளம் வயது லண்டன் கூட்டாளி. வயதான பின் அவர் பார்க்க வந்தார். அவர் லண்டனில் சினிமா கலைத்துறையில் புகழுடன் இருந்தார். அவரிடம் 1857 புரட்சி குறித்து சினிமா எடுக்க சாவர்க்கர் வேண்டினார். நிரஞ்சன் 1959ல் மறைந்தபோது , இந்திய அரசாங்கம் இரங்கல் தெரிவிக்கவில்லையே என குறை கூறினார் சாவர்க்கர். ஆனால் 1964 நேரு மறைவின் போதும், பின்னர் தாஷ்கண்டில் சாஸ்திரி மறைவின் போதும் எந்த செய்தியையும் சாவர்க்கர் வெளியிடவில்லை.

இ எம் எஸ் சர்க்காருக்கு எதிராக கல்விக்கூடங்களை நடத்தி வந்த கிறிஸ்துவ அமைப்பினர் போராடியதை எதிர்த்து, இ எம் எஸ் சர்க்கார் நீடிக்க துணை செய்வீர் என இந்து மகாசபாவிற்கு அறிவுரை கூறினார். நிர்ப்பந்தத்திற்கு பணிந்து 1959ல் இ எம் எஸ் ராஜினாமா செய்யவேண்டாம் என்றார் சாவர்க்கர். அன்று கேரளா சட்ட மந்திரியாக இருந்த கிருஷ்ணய்யர் சாவர்க்கர் சொல்வது சரி என வாதாடினார் என தனஞ்செய் எழுதுகிறார். கம்யூனிசத்தில் நமக்கு சரியென படுவதை ஏற்கலாம் என தொண்டர்களிடம் அப்போது சாவர்க்கர் சொல்லியுள்ளார்.

பிப்26 1966 ல் நோய்வாய்பட்டு சாவர்க்கர் மறைந்தார். இந்திரா அம்மையார், தோழர்கள் டாங்கே- சர்தேசாய், சோசலிஸ்ட் எஸ் எம் ஜோஷி உள்ளிட்ட பலர் இரங்கல் தெரிவித்தனர். தோழர் சர்தேசாய் இறுதி நிகழ்வில் பங்கேற்றார். தனக்கு எந்த மதச்சடங்கும் வேண்டாம்- தன் உடலை மனிதர்கள் சுமந்து செல்லாமல் வேனில் எடுத்துச் சென்று எரித்துவிட சாவர்க்கர் உயில் எழுதியிருந்தார். 'திதி' என ஆண்டு சடங்கு வேண்டாம் என எழுதினார்.

ஏராளம் தியாகம் செய்தவர் -உடல் வதை சொத்து பறிப்பிற்குள்ளானவர்- ஆனால் பெரியளவு முரண்பாடுகளின் அரசியலை தூக்கி பிடித்தவராக சாவர்க்கர் வாழ்ந்து மறைந்துள்ளார். அவரின் இந்துத்துவா பெரும் பதட்ட அரசியலை நிகழ்ச்சி நிரலில் ஏற்றியுள்ளது.

நவ 27

Com Basavapunnaiah of CPIM wrote so in their Organ PD

"We are not oblivious of the fact that ours is a society with a predominantly petty bourgeosie class composition, that it is still politically backward with an extremely low level of class consciousness, that the proletarian and semi proletarian element is weak in the composition of the party, Marxist- leninist education is far from satisfactory and that it will have to travel yet a long and difficult path before it comes a mass revolutionary proletarian party capable of fulfilling its historic role"

(People's Democracy July 23, 1967)

நவ 27

இஸ்லாம் குறித்த இந்திய எழுத்துக்களை அவ்வப்போது பார்த்துக்கொண்டு update செய்துகொள்ள வேண்டும் என நினைப்பதுண்டு. முஷ்ருல் ஹாசனை அறிமுகம் செய்திருப்பேன். மதச்சார்பின்மை, மத நல்லிணக்க எழுத்துக்களை ஹாசன் போலவே அஸ்கர் அலி எஞ்சினியர் தந்தவர். அவரது மெயின்ஸ்ட் ரீம் கட்டுரைகளை தேடிப்படித்தக் காலம் 1980- 90கள்.

அஸ்கரின் The Origin and Development of Islam நல்ல அறிமுகப் புத்தகம். 1990களின் துவக்கத்தில் அதன் தமிழ் வடிவமான இஸ்லாமின் தோற்றமும் வளர்ச்சியும் படித்த நினைவு இருக்கிறது. மீண்டும் நினைவூட்டிக்கொள்ளவேண்டிய ஆக்கமது. ஓரியண்ட் லாங்க்மேன் பதிப்பது. இரண்டாவது ரீடிங் 2005 ல் எனக் குறித்துள்ளேன். மீண்டும் வாசிக்கலாம்.

ராகுல்ஜி பல்வேறு தத்துவங்களை தனித்தனியாக அறிமுகம் செய்த அறிஞர் தோழர். அவரும் இஸ்லாமிய தத்துவ இயல் என்கிற ஆக்கத்தை எழுதியுள்ளார். தமிழில் 1980 களில் வந்த ஒன்று. என் சி பி எச் போட்டனர். இதுவும் மீள் வாசிப்பிற்கான நூலே. ஆனால் அது இஸ்லாம் குறித்து பல்வேறு வியாக்கியானங்களை கொடுத்த புலமைத்துவ சிந்தனையாளர்களை அறிமுகம் செய்வதாக அமைந்த நூல். பொறுமை ஆர்வம் இருந்தால் படிக்கலாம்.

எம் என் ராயின் The Historical Role of Islam அளவில் சிறிய ஒன்றாக இருந்தாலும் , மார்க்சிய வட்டாரத்தில் தொடர்ந்து பேசப்படும் ஆக்கம். விடியல் பதிப்பகம்

1990களின் இறுதியில் தமிழில் கொணர்ந்தார்கள். 80 பக்கங்களில் தமிழில் கிடைக்கக்கூடிய கச்சிதமாக எழுதப்பட்ட நூல். முக்கிய கருத்தாக்கம் ஒன்றிற்கு ராய் வந்திருப்பார்

“ இஸ்லாமை இராணுவவாதத்தோடு சேர்த்துக் குழப்புவது வரலாற்றை தவறாக புரிந்துகொள்வதாகும். முகம்மது நபி அராபிய வீரர்களின் இறைதூதர் அல்ல. அராபிய வணிகர்களின் தூதர். சொல் விளக்கத்தில் இஸ்லாம் என்பதற்கு அமைதியை உருவாக்கிக்கொள்வது என்ற பொருள் உண்டு” .

ராயின் ஆக்கம் வாசிக்கப்படவேண்டிய நூல். இறைப்படையின் கட்டளை என அபுபக்கரை மேற்கோள்காட்டி இந்த வரிகளை ராய் தந்திருப்பார்.

“ நேர்மையோடு இருங்கள், நேர்மையற்றவர் நல்லபடியாக வாழமுடியாது. மண்டியிடுவதைவிட மரணமடைவது மேலானது. கருணையுடன் இருங்கள். முதியோர், பெண்கள், குழந்தைகளை வதை செய்யாதீர். பழமரங்களை, தானியங்களை, ஆடுமாடுகளை அழிக்காதீர். எதிரிகளிடம் கூட சொன்ன சொல்லைக் காப்பாற்றுங்கள். இவ்வுலகிலிருந்து ஓய்வு பெற்று வாழ்கின்றவர்களை துன்புறுத்தாதீர்”

சச்சார் கமிட்டி வந்த சூழலில், சிபிஅய் நியுஏஜ் எடிட்டராக இருந்த தோழர் சமீம் பைஸி எழுதிய நூல் CPI on Indian Muslims- past present and future. 2007ல் வந்த ஆக்கம். விடுதலைக்குப் பின்னரான இந்திய முஸ்லீம்களின் அரசியல், ஜமாத் இ இஸ்லாமி போன்ற இயக்கங்கள், ஷா பானு வழக்கு, பாப்ரி மஸ்ஜித் ராம ஜென்மபூமி சச்சரவுகள் போன்ற பின்புலங்களுடன், சச்சார் காட்டியுள்ள முஸ்லீம்களின் சமூக பொருளாதார நிலைகளை பேசுகின்ற் சிறு நூல் . 80 பக்க ஆங்கில புத்தகம். வாசித்து பார்க்கலாம்.

ஏ ஜி நூரணி அவர்கள் எழுதி தமிழில் கிடைக்கும் நூல் இஸ்லாமும் ஜிகாத்தும் . பாரதி புத்தகாலயம் 2003 ல் கொணர்ந்தனர். 110 பக்கங்களுடன் சிறிய நூல்தான். இஸ்லாம் குறித்த தவறான அபிப்ராயங்களை போக்க நூரணி முயற்சி செய்துள்ள நூல்.

எங்கள் பகுதி தொழிற்சங்க பெருந்தலைவர்களுள் ஒருவர் தோழர் டி ஞானையா. மார்க்சிய அறிஞர். ஏராள புத்தகங்களை எழுதியவர். அவர் தனது 86 ஆம் வயதில் எழுதிய நூல் 'இஸ்லாமும் இந்தியாவும்' .

அலைகள் 2007 ல் வெளியிட்ட புத்தகம். கவிஞர் பேராசிரியர் வங்கித் தலைவர் ரகுவிற்கு மற்றும் எனக்கெல்லாம் நன்கு தோழமையாக இருந்துவரும் பேரா வே சுகுமாரன் அணிந்துரை எழுதிய நூல். இந்திய இஸ்லாம் குறித்த அரசியல் வரலாறாக இதைப் பாவிக்கலாம். பெரிய நூல்.

சையத் காசிம் எழுதிய நூல் Islam and Rationalism. குரானில், நபிகளின் சிந்தையில் வெளிப்படும் பகுத்தறிவுவாதம் பற்றி எடுத்துக்கூறும் நூல். டெல்லி வெளியீடு. 110 பக்க அளவிலான நூல்தான்.

மேற்கண்ட நூல்களை மறுவாசிப்பு செய்ய விருப்பம். காலம் அனுமதிக்கட்டும்.

நவ 27

வீடானாலும், அலுவலகம் ஆலையானாலும், அமைப்பானாலும், அரசாங்கமானாலும் எப்போதும் எனக்கே அதிகாரம் என செயல்படுபவர்களிடத்து படபடப்பு, அச்சம், சந்தேகம் நிலைகொண்டுவிடுகின்றன. பொறுப்புணர்ந்து கடமையை செய்வாரிடத்தில் நிதானமும் பொறுமையும் குடியமர்கின்றன

தோழர் நமரி

சுயசரிதைகள் சுவையானதாகவும் செய்திகளைத் தரக்கூடியதாகவும் இருக்கும். சில நேரம் நல்ல அனுபவமாக இருக்கிறதே எனக்கூடத் தோன்றும். அடுத்தவர் வாழ்க்கையை எட்டிப்பார்க்கும் மனோபாவம் இருக்கத்தானே செய்கிறது.

திருமதி இந்திராணி ஜெகஜீவன்ராம் தன் வரலாறு நினைவுக் குறிப்புகள் ஆங்கிலத்தில் Milestones என்ற பெயரில் வெளியிடப்பட்டுள்ளது. வந்து மாமாங்கம் ஆகிறது. இந்தியில் 1990களில் மூன்று வால்யூம்களாக அவை இந்தியர்களுக்கு கிடைக்கப்பெற்றன. ஆங்கிலத்தில் 300 பக்கங்களில் மொழிமாற்றம் செய்யப்பட்டுள்ளது . பெங்குவின் இந்தியா கொணர்ந்துள்ளனர். மகள் புகழ்வாய்ந்த மீராகுமாரி சிறிய முன்னுரை எழுதியுள்ளார்.

1946 லிருந்து மிக உயர்ந்த அதிகார ஆட்சிமுறை வீட்டின் பெண்மணி என்கிற வகையில் இந்திய அரசியலின் நுணுக்கங்களை- அதன் மேடு பள்ளங்களை நன்கு அறிந்தவராகவே இந்திராணி அம்மையார் இருந்திருப்பார். எதைச் சொல்லலாம் - கூடாது என்பதில் அவருக்குள் போராட்டம் நடந்திருக்கும்.

பாபுஜி என அழக்கப்பட்ட ஜெகஜீவன் வாழ்க்கையில் சக தோழியாக, இந்திய விடுதலைப் போரின் கட்டங்கள், காந்தி படுகொலை, ஜெகஜீவன் பல்வேறு துறை அமைச்சர் அனுபவங்கள், பாகிஸ்தான் மற்றும் சீன போர், நேருவின் மறைவு என பல்வேறு விஷயங்களை இந்திராணி தன் நினைவுகளிலிருந்து பேசுகிறார். ஜெகஜீவன் மறைந்த பின்னர் 15 ஆண்டுகள் வாழ்ந்து தனது 91 ஆம் வயதில் வாழ்வை நீத்தவர் இந்திராணி.

அவரது வாழ்வின் இளம் பகுதியிலிருந்து…

1900த்தின் ஆரம்ப ஆண்டுகளின் சாதிய ஏற்றத்தாழ்வின் வெம்மையை உணர்ந்தே இந்திராணியின் கல்வி வாழ்க்கை கடந்தது. 1850 களின் காலத்திய தந்தையார் பீர்பால்தாஸ் - பிரிட்டிஷ் ஆசிரியர் மற்றும் இங்கிருந்த சில நல்லாசிரியர்கள் துணையுடன் கல்விக்கூடம் நுழைந்ததுடன் இராணுவ டாக்டரின் உதவியுடன் மருத்துவம் தேர்ச்சி பெற்று கான்பூரில் டாக்டர் தொழிலை நடத்தலானார். ஆரம்பத்தில் பிரிட்டிஷ் இராணுவ மருத்துவராக இருந்த அனுபவம் உதவியது.

துசியாஸ் ( dhusias ) என்கிற துணைச்சாதி ஒன்றில் பிறந்த பூர்வீக குடும்பமது. துசியாஸ் பொதுவாக தோல் தொழில், விவசாயக் கூலிகளாக இருந்தனர். பீர்பால் கல்வியின் அவசியத்தை குழந்தைகளுக்கு உணர்த்தினார். பெண்களை கல்வி கற்க அனுப்பினார். வீட்டில் உருது சமஸ்கிருதம் கற்க வைத்தார். பெண் குழந்தைகள் காயத்ரி சொல்லின. ஆரிய சமாஜம் பீர்பாலை அரவணைத்தது. பீர்பால் அவ்வூரின் அனாதை குழந்தைகளுக்கென தனி விடுதி உருவாக்கி , கல்வி கற்க வைத்தார். அனாதையான பிராமண, சத்திரிய குடும்ப குழந்தைகள், பீர்பால் வீட்டு குழந்தைகளுடன் தங்க வைக்கப்பட்டனர்.

டிஸ்பென்சரியிலிருந்து பீர்பால் இரவு 9 மணிக்கு வரும்போது, அனைத்து குழந்தைகளுக்கும் தினம் பழங்கள் கிடைக்கும்.

கான்பூரில் இந்திராணி சாதி அறிந்த அந்த பலிகா வித்யாலயா உயர்நிலைப்பள்ளி சேர்க்க மறுத்தபோது, லக்னோ பள்ளியில் விடுதியில் சேர்த்து படிக்க வைத்தனர். இந்திராணி உட்பட மாணவிகளுக்கு பிராமண சமையல் அம்மாவும், பாத்திரம் சுத்தம் செய்ய சாதி இந்து அம்மாவும் இருந்தனர். இந்திராணி சாதி தெரிந்தவுடன் அவர் தட்டை சுத்தம் செய்ய முடியாது என்ற நிலை உருவானது. சக மாணவிகள் உடன் அமர்ந்து உணவு எடுத்துக்கொள்ள மறுத்தனர்.

ஆங்கிலோ இந்திய வார்டன் மாது இந்திராணி பக்கம் நின்றார். பின்னர் நிலைமைகள் சரியாகி, பிராமண பெண்கள் நல்ல தோழிகளாகினர். இந்திராணி உடல் நலம் பாதித்த போது, அவளுக்கு பதில் என்னை எடுத்துக்கொள் கடவுளே என வேண்டும் அளவிற்கு நட்பின் ஆழம் சென்றது.

பீர்பால் ஏராளம் சம்பாதித்தார். பல முதலீடுகள் நட்டமாயின. மகனுக்கு கொடுத்த நிதிகளும் முடங்கி , 70 ஆம் வயதுகளில் பணம் இல்லாமல் குடும்பம் கஷ்டத்திற்கு உள்ளானது. அம்மா சைதன்ய தேவி சமாளித்தார். மூத்த பெண் மட்டுமே திருமணமான நிலை. அண்ணன், அப்பா, அம்மா என இறப்புகள் நேர அக்கா மற்றும் அவரது கணவரின் பராமரிப்பில் இந்திராணி வந்தார். ஆசிரியப்பணி கிட்டியதால் குடும்பத்தை சமாளிக்க முடிந்தது.

மற்றொரு சகோதரி பாரத்தை நீக்க கொடுமைக்கார குடும்பம் ஒன்றில் தன்னை ஒப்படைப்பு செய்துகொண்டார். இச்சூழலில்தான், காங்கிரஸ் முழுநேர ஊழியர்

ஜெகஜீவன் ராமை இந்திராணிக்கு பார்க்கலாம் என உறவுக்காரர் சொல்லி திருமண பேச்சுவார்த்தை நடந்தது.

சந்த்வா கிராமம் போகவேண்டுமெனில் காலையில் இரயில் ஏறினால் மாலையில் போகலாம். நகைநட்டு போட்டு திருமண பழக்கம் இல்லை என ஜெகஜீவன் குடும்பத்தார் தெரிவித்தனர். மாப்பிள்ளை கல்வித்தகுதி என்ன என இந்திராணி குடும்பம் கேட்டது. அதற்கு ஜெகஜீவன் நான் வேலைக்கு விண்ணப்பிக்கவில்லை. பயோடேட்டா எதற்கு என்றாராம். ஒரு வழியாக திருமணம் ஜூன் 1, 1935 ல் நடந்து புதிய உலகத்திற்கு , கிராமத்திற்கு நகர வாழ்க்கையின் இந்திராணி வந்து சேர்கிறார். குடும்பத்தார் அன்புடன் நடத்துகின்றனர்.

கொந்தளிப்பான அரசியல் சூழல்களில் ஈடுபட்ட கணவனுடன் இந்திராணி எப்படி சக பயணியாக வாழ்ந்தார் என்பதை வாய்ப்பு உள்ளபோது அடுத்து பார்க்கலாம்..

NOV 24 2023( 2016 Reposting)

The Marxist Sociology in India- A study of the Contribution of A R Desai என்ற ஆய்வு புத்தகத்தை அர்பிதா முகர்ஜி என்ற பேராசிரியை எழுதியுள்ளார். நேஷனலிசம் என்கிற உருவாக்கம் அதில் பங்கேற்றவர்களின் வர்க்கப் பின்னணி, செயல்பாடுகள், இந்திய விவசாயம்- விவசாய வர்க்கம், இந்தியாவில் வளர்ந்து வரும் முதலாளித்துவ அரசு, சமுக இயக்கங்கள், எதிர்ப்பு போராட்டங்கள் என பல்வேறு தலைப்புகளில் ஆய்வாளர் மார்க்சிய ஆய்வாளர்கள் பலரின் மேற்கோள்கள், வந்தடைந்த முடிவுகளுடன் இப்புத்தகத்தை எழுதியுள்ளார். இந்தியாவில் குறிப்பிடத் தகுந்த சிந்தனையாளர், சமுகவியளார், மார்க்சிய ஆய்வாளர் தேசாயின் பார்வையில் என அர்ப்பிதா தனது வாதங்களை நகர்த்துகிறார்.

அக்சய் குமார் ரம்ன்லால் தேசாய் குஜராத்திலிருந்து நமக்கு கிடைக்கப் பெற்ற மார்க்சிய ஆய்வாளர். ஏப்ரல் 16,1915ல் பிறந்து 80 ஆண்டுகள் வாழ்ந்து செயல்பட்டு நவம்பர் 12, 1994ல் மறைந்தவர்.. இந்தியாவில் சோசியாலஜி என்கிற ஆய்வுவகைதனை நூற்றாண்டாக பலர் செழுமைபடுத்தியுள்ளனர். ராதாகமல் முகர்ஜி, குர்யி, மஜூம்தார், பினாய் குமார், தேசாய், சீனிவாஸ், திபங்கர் குப்தா போன்றவர்கள் இந்திய சமூகம் குறித்து ஏராளம் எழுதியுள்ளனர். தேசாய் புகழ்வாய்ந்த ஜி எஸ் குர்யி அவர்களிடம் கற்றவர். இந்திய தேசியம் சமுக பின்புலம் குறித்து எழுதியவர். ஊரக இந்தியாவின் சமுகவியல், அரசும் சமுகமும், விவசாய போராட்டங்கள், இந்தியாவின் வளர்ச்சிப்பாதை போன்ற மிக முக்கிய ஆய்வு நூல்களை தந்தவர்.

தனது இளமைக்காலத்தில் சி பி ஐ கட்சியில் செயல்பட்டவர். ஸ்டாலினிச கொள்கைகளால் இரண்டாம் உலகப்போர் காலத்தில் மாறுபட்டு டிராட்ஸ்கியவாதியாக போல்ஷ்விக் லெனினிஸ்ட் கட்சி என்பதில் இணைத்துக் கொண்டு செயல்பட்டவர். மார்க்ஸ், எங்கெல்ஸ் லெனின் நூல்களுடன் டிராட்ஸ்கி, காட்ஸ்கி, மௌரிஸ் டாப், கார்ல் மேன்ஹய்ன் எழுத்துக்களுடன் பழக்கப்படுத்தி கொண்டவர் தேசாய். பின்னர் 1953-81 காலங்களில் ஆர் எஸ் பி கட்சியின் மிக முக்கிய கோட்பாட்டாளராக விளங்கினார். இந்திய சமுகவியலாளர் சொசைட்டியில் முக்கிய பங்காற்றினார். பிரிட்டிஷ் காலத்தில் தொழிற்சங்கங்கள் என்ற புத்தக தொகுப்பை வழங்கினார். குஜராத்தி மொழியில்

சோசலிச கருத்துக்களை பரவ செய்யும் வகையில் இதழாசிரியராக இருந்தார். நான்காம் அகிலத்துடன் தொடர்ந்து உறவுகளை வைத்திருந்தார் தேசாய். அவரது ஆய்வுகள் மார்க்சியர் வட்டாரத்தில் போதுமான கவனம் பெறாமல் போனது வருத்ததிற்குரிய ஒன்று.. அர்ப்பிதா எழுத்து நடை வசீகரமாக நம்மை அழைத்து செல்வதாக இல்லை என எனக்கு தோன்றுகிறது. சோர்வை ஏற்படுத்துகிறது . எனினும் தேசாய் போன்ற மறக்கடிக்கப்பட்ட ஆய்வாளர்களை மறு வாசிப்பு செய்ய இப்புத்தகம் உதவுகிறது. வழக்கம் போல் இம்மாதிரி புத்தகங்களை வெளியிடும்கல்கத்தா கே பி பக்ஷி நிறுவனம்தான் இதையும் வெளியிட்டுள்ளது. கன்னிமாரா சென்னை நூலகத்தில் 335.4 எண் கொண்டதாக இப்புத்தகம் கிடைக்கிறது. விலை ரூ 795 தான். 2015 பிப்ரவரியில் கன்னிமாரா வந்த இந்நூலை 2015 ஏப்ரலில் ஒருவர் எடுத்துள்ளார். தற்போது 2016ல் எனக்கு படிக்க வாய்ப்பு கிடைத்தது.

Nov 24

” சிக்கலான பிரச்சினைகள், அய்யப்பாடுகள், மனக்குழப்பங்கள், குமுறல்கள் ஏற்படும்போது, எது முறை?

தெளிவும் துணிவும் பொறுப்பும் பொறுமையும் மிகுதியாக இருக்கவேண்டும்.

தன் சொந்தக் கருத்தைத் திணிக்கவேண்டும் என்ற நினைப்பு எழலாகாது.

பிரச்சினையை எந்தவிதமான விருப்பு வெறுப்புகளுடனும் பிணைத்து விடலாகாது.

தவறான கருத்தைத் தந்திரமாகப் புகுத்தும் முயற்சியை மேற்கொள்ளக் கூடாது.

என் யோசனைதான் - என் திட்டம்தான் என்ற எக்களிப்பைக் கொட்டிக் காட்டக்கூடாது.

கேட்பவர், கருத்தற்றவர்; அறிவுப் பஞ்சத்தால் நம்மை வந்து நாடுகிறார் என்ற தப்புக் கணக்கும் போடக்கூடாது.

பிரச்சினையை அணுகும்போது, தனது நிலையை அளவுகோலாக்கிக் கொள்ளாமல், பொறுப்பினை மேற்கொண்டுள்ளவரின் நிலையினை அளவுகோலாகக் கொள்ளவேண்டும்.

கேட்பவர் மனம் மகிழவேண்டும் என்பதற்காகத் தித்திப்பு கூட்டக் கூடாது; பிரச்சினையை விட்டுவிடட்டும் என்பதற்காகக் கசப்பினையும் கலக்கக்கூடாது.

இவ்வளவு இலக்கணமும் பொருந்தியுள்ளவர்கள், கிடைத்தால் மட்டுமே, பொறுப்பினை மேற்கொள்பவர்கள், தங்கள் மனதிலே எழும் அய்யப்பாடுகளை நீக்கிக் கொள்ள, சிக்கல்களைப் போக்கிக்கொள்ள, வழி காண்பர்”

-அறிஞர் அண்ணா வெள்ளை மாளிகையில் பக் 55-56

Nov 23

com Ajoy Ghosh then GS of CPI wrote so

The 20th congress of CPSU(soviet) not only ended deification of Joseph Stalin, but also demolished in the infallibility of any party or any leader

Newage Dec 10, 1956

Nov 22

Buddhism - The Marxist Approach என்கிற கட்டுரைத் தொகுப்பு வந்து 50 ஆண்டுகளுக்கு மேலாகிவிட்டது. பிபிஎச் நிறுவனம் இதன் 7 வது பதிப்பை 10 ஆண்டுகளுக்கு முன்னர் கொணர்ந்தனர்.

மார்க்சிய பயிற்சியுடன் இந்திய தத்துவ சிந்தனைகளை ஆய்வுசெய்திட்ட அறிஞர்கள் தேவிபிரசாத் சட்டோபாத்யாய, ராகுல்ஜி, பலராமமூர்த்தி, ராம்பிலாஸ் ஆகியவர்களுடன் இலக்கியவாதி முல்க்ராஜ் ஆனந்த் கட்டுரை ஒன்றும் இதில் இடம் பெற்றுள்ளது.

'புத்த இயக்கவியல்' என ஒன்றை ராகுல்ஜி இதில் அறிமுகப்படுத்தியிருப்பார். பகுஜன ஹிதயா பகுஜன சுகயா என பலரின் மேம்பாட்டிற்கு சிந்தனைமுறை என அவர் காட்டியிருப்பார். அஸ்மின் சதி இதம் பவதி- At the completion of this, this is born. What has ended is the cause and what has emerged after the cause is the effect- one preceded or followed the other என்கிற வகையில் புத்த இயக்கவியலை ராகுல்ஜி முன் வைக்கிறார். புத்தம் இதை dependent origination- pratitya sar utpaad என விளக்குவதாக ராகுல்ஜி எழுதுகிறார். இதை 'பதிச்ச சமுப்பாத' என பலராமமூர்த்தி எழுதுகிறார்.

தர்மகீர்த்தி இதை மேலும் விரிவுபடுத்தி one thing is not born out of one but all is born of collective causes- no effect has only one cause, but several causes together give birth to one effect. இதை புத்தம் 'ஹெதுசமகிரி வாத ' முறை எனச் சொல்வதாக ராகுல்ஜி சொல்கிறார். தர்மாதிகாரி வேதத்தின் அதிகாரம், படைப்பவன் என ஒருவன், புனித நீராடல், சாதிகளின் கர்வம், பாவம் போக்க உடலை வருத்திக்கொள்ளுதல் என்கிற இந்த அய்ந்தும் முட்டாள்தனத்தின் உச்சமே என பேசியதாக ராகுல் எழுதுகிறார்.

ராகுல்ஜி இந்த கட்டுரையை கீழ்கண்டவரிகளுடன் முடித்திருப்பார்

Buddha and his followers propounded a philosophy which includes several features of advanced materialism but they were not prepared to call themselves materialists.

பண்டைய புத்தம் என்பதை புரிந்துகொள்வதில் இருந்த பல்வேறு போக்குகளை தேவிபிரசாத் ஆய்வாக கொடுத்திருப்பார். Rhys Davids, Oldenburg ஆய்வுகளின்

வேறுபாடு புரிதல்களை தேவிபிரசாத் எடுத்துக்காட்டியிருப்பார். புத்தர் ஏழைகளுடன் நின்றவர் - இல்லை வணிகர் பணம் படைத்தவர்களுடன் நின்றவர் என்கிற இருவேறு உரையாடல்கள் புத்தர் பற்றி நிலவுவதாக தேவி எழுதுகிறார்.

பழங்குடி டிரைபல் சமூகத்தை pre class primitive communism சமூகமாக தேவி சொல்லிவிட்டு அதன் பல கூறுகளை புத்தம் எடுத்துக்கொண்டதாக விவாதிப்பார் . இதனால் புத்தரை கம்யூனிஸ்ட் என்று புரிந்துகொள்ளும் தவறு வேண்டாம் என்கிற எச்சரிக்கையை தேவி தருவார். கண சமூகத்தில் புத்தர் வாழ்ந்தார் . இதைப் பற்றி ஜெய்ஸ்வால், ரைஸ் டேவிட், பண்டார்கர், மஜும்தார் என பல அறிஞர்கள் வெவ்வேறு புரிதல்களை தருவதாகவும் தேவி எழுதுகிறார்.

தேவி இங்கு தன் பார்வையாகத் தருவது

What is more remarkable about the early Buddhist tradition is that the fact probably lingered in its memory as how class divided society with monarchical power, emerged on the ruins of an eagalitarian society, and further how the growth of private property, consequent on the discovery of agriculture, was at the root of this great change. வர்க்க சமுதாய உருவான காலமாக தேவி வர்ணிப்பதைக் காண்கிறோம். அதே போல் ஆரம்ப புத்தம் கடவுள் ஏற்பின்மையை மட்டுமல்ல, தன்னை சமயமாக முன் நிறுத்தவும் தயங்கியதாக தேவி குறிப்பிடுகிறார்.

பலராமமூர்த்தி ‘புத்த தத்துவம்’ என்பதை சுருக்கமாக சொல்கிறார். புத்தர் தர்மம் எனக்காட்டிய விஷயம் புலமைத்துவமானதல்ல. சார்ந்த மூலம் என்கிற ‘பதிச்ச சமுப்பதா’ அதாவது dependent origination. இதுதான் புத்த கோட்பாட்டின் மய்ய சரடு என பலராமமூர்த்தியும் முன் வைக்கிறார். சற்று நீளமான வரிகள் என்றாலும் அதன் பொருள்முத போக்கிற்காக பலராமமூர்த்தி விரிவாக இதைத் தருகிறார்.

Nothing exists by itself, nothing is absolute. Everything depends on something else. Everything is the effect of some cause. As long as the cause exists, effect also exists..everything is relative. Cause and effect are interrelated. One thing flows from the other.

இன்னும் தர்மாவை சொல்லித்தருகிறேன் என புத்தர் பேசியதாக பலராமமூர்த்தி எழுதியிருப்பது

I will teach you Dharma. That being thus this comes to be. From the coming to be of that, this arises. That being absent, this does not happen. From the cessation of that this ceases. This is the Dharma- the law of patichha samuppada

புத்தகோசர் கூறினாராம் no absolute sameness or absolute difference.

அடுத்த கட்டுரை ராம்பிலாஸ் சர்மா எழுதிய some aspects of teaching of Buddha. புத்தருக்கு பிரச்சனை போலி பிராமணர்களிடம் என சர்மா விவாதிக்கிறார். கணங்கள் குறித்து ஜெய்ஸ்வால் பேசியதை சர்மா சொல்கிறார். பிராமணர்களை எதிர்த்து போராடியிருந்தாலும், புத்த பிட்சுக்களும் சமூக சட்டங்களுக்கு மேலானவர் என்கிற சிறப்புரிமை பெற்றதையும், 'பிராமண புரோகிதம்' என்கிற இடத்தில் 'புத்த புரோகிதம்' உருவானதையும் சர்மா சொல்கிறார்.

ராமாயண ஜவாலி கூட பொருள்முதவாத ஆசிரியர்தான். புத்தருக்கு முன்பே கூட பொருள்முத சிந்தனை இருந்துள்ளது. புத்தருக்கு பின்பும் அது இருந்தது என சர்மா தன் ஆய்வில் வந்தடைகிறார். சார்வாகர்கள் கூடுதல் தெளிவுடன் பொருள்முதல்வாதிகளாக இருந்தனர் எனவும் சர்மா சொல்கிறார். சர்மாவும் புத்தத்தின் மய்யக் கோட்பாடு the law of dependent origination என்பதை ஏற்கிறார்.

புத்தர் ஆனந்தரிடம் உலகை விட்டு விடைபெறும் நேரத்தில் கூறினாராம் -

Do not grieve Ananda, that the Tathagata is passing away. All that is born must die. Go and preach the dharma.

புத்தம் பெரும் கருத்து புரட்சி ஒன்றை செய்ததாக மார்க்சியர் புரிந்து அதை இந்நூலில் விளக்கியுள்ளனர். The concept of change. Nothing is permanent. Everything thing changes..

90 பக்க அளவிலான சிறு நூல்தான் . வாய்ப்புள்ளவர் வாசித்துப் பார்க்கலாம்.

Nov 22

Com Namari said so

Normally sentiments are personal. Indians have that special psyche of even making the sentiments as a movement to gain and to score personal boosting. Even it is made a movement, the agenda deep down is very much personal.

This we can see in caste sentiments, religious sentiments and even linguistic sentiments or any other sentiments of identity politics.

Nov 22

" one characteristic of 20th century politics is its organized character. There is no politics that is not organisational, the word party denotes this.

In the 19th century the idea of politics was insurrectionary, while in the 20th century it was party like.

The question of class is no longer judged according to the social origin of its members, since it recruits in all classes of society. The class reference of parties becomes ideological and programmatic"

_ Lenin and the party by Sylvain Lazarus

## பென்சன்

Nov 21 Good to see Consensus

I happened to see the letter of PWA pensioners Association dated 15 th Nov 2023 addressed to Secretary DOT.

The subject matter of that letter is to implement CAT judgment without going any appeal , on the basis of 7 th CPC fitment.

The concluding para of the letter suggests ‘ How to implement the Referred judgment’

It seems that almost on 4 aspects the consensus is there, as per DOT’s Oct 17th presentation done in 2022.

Date of effect : 1-1-2017 for post 2017 Retirees also as that of pre 2017.

IDA merger points as per 3 rd PRC : 119.5 %

Notional fixation for post 2017 in the absence of pay revision as suggested by DOT

Taking the basic pay of the post 2017 employees on 1-1-2017 for notional fixation as suggested by DOT

The other 2 aspects are ‘the fitment and the pay scales’, in which there seems to be some differences and if those differences are also brought into conciliation, then things will get shaped.

DOT stood with zero or nil fitment , some unions demanded 15 % as per 3 rd PRC on the merger of basic and IDA, the PWA is demanding 32 % of basic , a kind of derivative advocated by the association taking 7 th CPC. This aspect needs to be settled for consensus. It seems that associations would not stand on any rigidity on the issue of fitment 15 % or 32 % of basic, if DOT is ready to implement either of them or some fitment , it feels fit.

Applicability of 7 th CPC means the date of effect is from 1-1-2016 and that was implemented enhancing gratuity for the employees retiring from 1-1-2016, and the issues related to pension ( minimum and maximum) and Ida linked enhanced gratuity are pending for incorporation - and for these the date of effect is 1-1-2017 for the employees retiring from that date or those retired pre 2017 (regarding pension issue not gratuity issue)

The other issue is about pay scales. DOT is for 3 rd PRC scales. The issue of NoN Executives is there. Some unions are also for 3 rd PRC scales. But this letter of PWA is silent on this and neither speaking 7 th CPC scales nor 3 rd PRC scales. It seems that the leaders of that association are telling their members, there is no necessity of pay scales for pension revision to both pre 2017 and post 2017. This position of PWA is difficult to understand, I feel they should ponder this issue again.

There will be 8 th CPC and 4 th PRC in future. They definitely suggest new pay scales. Unless all the BSNL retired are placed in 3 rd PRC scales , the post 2027 Retirees issue will become complicated..they also

cannot continue in 2 nd PRC stagnated scales to get their notional fixation, as there will be new fitment , merger points and new date of effect and new pay scales.

This aspect of pay scales is yet to be solved even If DOT takes the demand of 32 % of PWA. This one is also need to be sorted out for enlarging the consensus area.

I hope DOT should help the pensioners by bringing consensus in all these aspects by improving its fitment position presented on Oct 17 th of 2022, for the revision of pension.

19 hrs 21-11-2023 R . Pattabiraman

Nov 21

ஆர்.கே சண்முகம் செட்டியார் பற்றி பலரும் அறிவர். முதல் நிதியமைச்சர் என்ற பெருமை உண்டு. நீதிக்கட்சி வழி பயணித்த பொருளாதார அறிஞர். கோயமுத்தூரார். தமிழிசைக் காவலர். சட்டமன்ற நாடாளுமன்ற அனுபவங்கள் கொண்டவர். அவர் காந்தியை எப்படிப் பார்த்தார் என சிறு கட்டுரை ஒன்றை எழுதியுள்ளார். மாணவர் எனும் நிலையிலிருந்து நிதி அமைச்சர்வரை அந்தப்பதிவு மிகச் சுருக்கமாகச் செல்கிறது

காந்தி சென்னையில் நடேசன் அவர்கள் வீட்டிற்கு வருகிறார் என அறிந்த சர்வகலாசாலை மாணவர் சண்முகம் பார்க்கலாம் எனப் போகிறார். சுங்குராம செட்டித்தெருவில் ஜி ஏ நடேசன் இருந்தார். மாணவர் சகிதமாக சண்முகம் காந்தியைக் காண்கிறார். வெள்ளைத் தலைப்பாகை, வெள்ளைச் சட்டை, ஓர் அங்கவஸ்திரம், தரையில் விரிக்கப்பட்ட ஜமக்காளத்தின்மேல் காந்தி உட்கார்ந்திருந்தார். சண்முகம் மாணவர்கள் சூழ அவரைச் சுற்றி அமர்கின்றனர். தென்னாப்பிரிக்கா இந்தியர்கள் பற்றி மெல்லிய குரலில் சொல்லத்துவங்கினார். அவதார புருஷர் என எங்களுக்கு தோன்றவில்லை என முதல் பார்வையில் சண்முகத்திற்கு படுகிறது.

மீண்டும் 10 ஆண்டுகளுக்கு பின்னர் அவர் கோயமுத்தூர் வருகிறார் என அறிந்து நகரசபை வரவேற்பு தரலாமா கூடாதா என ஆவேசமாக இருதரப்பு விவாதம் போய்க்கொண்டிருந்தது. அரசாங்கத்திற்கு எதிராக ஒத்துழையாமை என வரும் அவரை நகரசபை வரவேற்கக்கூடாது என்பது சிலரின் வாதம். மதுவிலக்கு, தீண்டாமை எதிர்ப்பு, கதர் ஆகியவற்றிற்காக வரவேற்கலாமே எனச் சிலர். சண்முகம் அவர்களும் நகரசபை உறுப்பினர். அவர் சமரசம் ஒன்றை வைக்கிறார். பாராட்டுப் பத்திரத்தில் ஒத்துழையாமையைக் கண்டிக்கிறோம் எனச் சொல்வோமே என்கிறார்.

சண்முகம் சொன்னது “ மகாத்மா உண்மைவாதி. நம் மனத்தில் உள்ளதை ஒளிக்காமல் எடுத்துச் சொன்னால் அவர் மகிழ்ச்சியடைவார். சண்முகம் கருத்து ஏற்கப்பட்டது.

சண்முகமே எழுதினார்

“ தங்களுடைய ஒத்துழையாமை இயக்கத்தில் எங்களுக்குச் சிறிதேனும் நம்பிக்கை இல்லை. ஒத்துழைப்பின் மூலமாகத்தான் நாடு விடுதலை அடையக்கூடும். ஆனால், நீங்கள் எடுத்துக்கொண்ட சீர்திருத்த வேலைகளை நாங்கள் முழுமனத்தோடு வரவேற்கின்றோம். தீண்டாமையை ஒழித்தல், மதுவிலக்கு, கதர் முன்னேற்றம், கிராமமுன்னேற்றம் இவை போன்ற காரியங்களில் நாங்கள் தங்களுக்கு முழு ஆதரவையும் கொடுக்கத் தயாராக இருக்கின்றோம்”

காந்தி என்ன சொல்லப்போகிறார் என ஆவலுடன் அனைவரும் காத்திருந்தனர். காந்தி சொன்னதாக சண்முகம் செட்டியார் சொல்லியிருப்பது:

“ வரவேற்புப் பத்திரத்தில் வெறும் புகழுரைகளைச் சொல்லாமல் உண்மையான கருத்துக்களை விளக்கியிருப்பது அளவிலா மகிழ்ச்சியைக் கொடுக்கிறது. என்னுடைய ஒத்துழையாமை இயக்கத்தில் நம்பிக்கை இல்லையானால் அதைமுற்றிலும் மறந்து விடுங்கள். அதற்காக நான் வருந்தப்போவதில்லை. எனது சீர்திருத்தவேலைகளில் நம்பிக்கை உண்டு என்று காட்டியிருப்பதே எனக்குப் போதுமானது. அவ்வேலைகளில் ஈடுபடுங்கள்”

1936ல் மீண்டும் கோயமுத்தூர் மகாத்மா வந்தபோது சண்முகம் வீட்டில் ஒருவாரம் இருந்தார். காலை உலாவச் செல்வர். ஒருநாள் சண்முகம் போகவில்லை. நடைப்பயிற்சி முடித்து வந்த காந்தி இவ்வூர் போலீஸ் அதிகாரியை தெரியுமா எனக்கேட்டார். ஏன் என்றேன். அவர் விளக்கினார்.

தோளில் மூங்கிலில் இரு பக்கமும் கட்டிய எண்ணெய் டின்னுடன் போன தெரு வியாபாரியை போலீஸ் கூட்டம் ஒன்று இடித்து எண்ணெய் கொட்டியதுடன் அந்த மனிதரும் கீழே விழுந்துவிட்டார். போலீஸ்காரர்கள் கேலி செய்துவிட்டு உதவாமல் போய்விட்டனர். அந்த எண்ணெய்க்காரரை கூட்டிக்கொண்டு வந்துவிட்டார் காந்தி.

விழுந்தது தமிழர்.தள்ளியவரும் தமிழர். புகழ்வாய்ந்த வேறு ஒரு தமிழர் காப்பாற்றுவார் என காந்தி அவரிடம் அழைத்து வந்துள்ளார். சண்முகம் வழக்கு போடவேண்டுமா என்கிறார். இல்லை. உயர் அதிகாரியிடம் சாந்தமாக சென்று

எடுத்துச்சொல்லி, நியாயம் கேட்டால் போது. தள்ளிவிட்ட போலீஸ் வருத்தம் தெரிவித்துவிட்டு கொட்டிய எண்ணெய்க்கு நட்ட ஈடு தரவேண்டும் என்றார் காந்தி.

வெள்ளை அதிகாரி முரட்டு பிடிவாதக்காரர் என்பதை சண்முகம் அறிவார். அவர் அந்த அதிகாரியைப்பார்த்து மகாத்மா இப்படி கருதுகிறார் என்றார். வந்து காந்தியை பார்க்க இயலுமா எனவும் வேண்டினார். முணுமுணுத்துக்கொண்டே வந்த அதிகாரியிடம் காந்தியின் உரையாடல் 10 நிமிடம் நடந்திருக்கலாம்.அந்த அதிகாரி தவறுதான் என்றார். ஈடான பணத்தை தானே தர சம்மதித்தார். காந்தியாருடைய அன்பு மார்க்கத்தின் பலனை நான் நேரில் கண்டேன் என்று இதைப்பார்த்த சண்முகம் எழுதுகிறார்.

அன்று மாலை காந்தியின் போட்டோ ஒன்றில் கையெழுத்து போட்டுத்தாருங்கள் என சண்முகம் கேட்கிறார். காந்தி சும்மா கையெழுத்து போடமாட்டார். எவ்வளவு என சண்முகம் கேட்கிறார். அதெல்லாம் வேண்டாம். அரைமணி ராட்டை நூல் நூற்பாய் என்றால் போடுகிறேன் என்றார் காந்தி. அது என்னால் இயலாது என நேர்மையாக சண்முகம் சொல்கிறார். சரி நாம் இருவரும் வியாபாரிகள். ஆனால் ஒளிவுமறைவில்லாமல் பேசியதால் நான் போட்டுவிடுகிறேன் என காந்தி கையெழுத்திட்டதை சண்முகம் சொல்கிறார்.

சண்முகம் அவர்கள் கொச்சி திவான். காந்திக்கு அரிஜனங்களின் ஆலய பிரவேச போராட்ட அழைப்பு கொச்சியிலிருந்து வருகிறது. காந்தி சண்முகத்திற்கு தந்தி அடிக்கிறார். எனது நண்பராகிய நீ திவானாகவும் இருக்கிறாய்- நான் வரலாமா? சண்முகம் பதில் தந்தி தருகிறார். கொச்சி வந்தால் பெரும் மகிழ்ச்சி. ஆனால் வயதான மகராஜா போராட்ட வெம்மையை தாங்களே நேரில் வந்தால் தாங்கமாட்டார் என்கிறார். காந்தி மறு தந்தியில் உன் சங்கடம் புரிந்துகொண்டேன். வரவில்லை எனச் சொல்கிறார்.

டெல்லியில் நிதியமைச்சராக சண்முகம் காந்தி பிர்லா மாளிகை வந்துவிட்டார் என அறிந்து போகிறார். காந்தி தமிழில் வாருங்கள் ஐயா ஷேமம்தானா என்கிறார். பின்னர் உரையாடல் ஆங்கிலத்தில் தொடர்கிறது. நீ டெல்லி வந்துவிட்டாய் ஒன்று அவர்களுக்கு தமிழ் சொல்லித்தா- இல்லையெனில் இந்துஸ்தானி கற்றுக்கொள் என்கிறார் காந்தி. ராஜாஜியே இன்னும் கற்றுக்கொள்ளவில்லை. நான் எப்படி கஷ்டம் என்றார் சண்முகம். காந்தி பலமாக சிரித்தாராம்.

பாகிஸ்தானுக்கு கொடுக்கவேண்டிய 55 கோடி உள்ளிட்ட பிரச்னைகளுக்காககாந்தி உண்ணாவிரதம் ஆரம்பித்தார். சண்முகமும் படேலும் சென்று பேசிப்பார்த்தனர்.

காந்தி கட்டிலில் படுத்திருந்தார். காலை 9 மணி. பிர்லா மாளிகை. மூன்று மணிநேரம் நேரு, படேல், ஜான் மத்தாய் ஆகியோரை காந்தி சமாதானப்படுத்தினார். பாகிஸ்தான் என்ன தவறுகள் செய்தாலும் நீங்கள் அகிம்சையை விடாதீர்கள் என்றார். மறுநாள் காபினட் 55 கோடி கொடுக்க முடிவெடுத்தது.

இந்த பேச்சுவார்த்தையின்போது வெய்யிலில் நின்ற சண்முகம் தனது கைக்குட்டையை தலையில் போட்டபடி பேசியதை கண்ணுற்ற காந்தி நேருவிடம் ஏதோ சொன்னார். உடன் பர்மா தொப்பி வந்தது. மகாத்மாவிற்கு வருகிறது என சண்முகம் நினைத்தார். காந்தியோ அவரிடம் நீட்டி அணிந்துகொள் என்றார்.

ஜனவ்ரி 30 காந்தி கொலையுண்டார் என்ற செய்தி சண்முகம் அலுவலகத்திற்கு எட்டுகிறது. செக்ரட்டரி ஓடிவந்து சொல்கிறார். வேலையை அப்படியே போட்டுவிட்டு பதறியபடி சண்முகம் செல்கிறார். நேருவும் படேலும் நிற்கின்றனர். சண்முகம் அழுகிறார். தான் தன் வாழ்வில் மூன்றாவது முறையாக அப்போது அழுததாக சண்முகம் பதிவிட்டுள்ளார்.

மறுநாள் அவரின் தகனம். சண்முக எழுதினார்

“ சந்தனக் கட்டையின் தீ ஓங்கி எரிந்து ஒளிவிட்டது. ஆனால் அந்த வெளிச்சத்தோடு உலக சோதியும் மறைந்தது”

Nov 20

So spoke MKG

Any Truth required a calm and meditative atmosphere for its percolation

8th May 1934 at Puri

Nov 19

காந்தியிடம் அவ்வப்போது முரண்பட்ட பதில்கள் வருகிறதே என்று அவரை சுற்றி நெருக்கமாக இருந்தவர்கள் குழம்பியுள்ளனர். படேல், நேருவும் கூட இதில் விலக்கல்ல.

தீண்டாமை ஒழிப்பு யாத்திரையின் ஊடே பீகார் நிலநடுக்க பகுதிகளை நிவாரண பணிகளை மேம்படுத்த காந்தி பீகார் வந்த ஆண்டு 1934.

திரள் ஒத்துழையாமை நிறுத்திவிட்டு, சட்டமன்ற பணிகள் நீடிக்கட்டும்- அப்படியே ஒத்துழையாமை வேண்டுமெனில் அது தனிநபர் ஒத்துழையாமையாக இருக்கட்டும் என காந்தி அறிவுறுத்தினார்.

நரிமன் போன்றவர் தனி நபராக ஒருவர் இரு வேலைகளையும் செய்வதை புரிந்துகொள்ளலாம், காங்கிரஸ் என்கிற அமைப்பால் ஒரே நேரத்தில் அரசாங்கத்துடன் ஒத்துழைக்கவேண்டிய சட்டமன்றப் பணிகள், தனி நபர் ஒத்துழையாமை என இரு நிலைப்பாட்டை எப்படி எடுக்கமுடியும் என விவாதித்து வந்தார். காந்தி காங்கிரசிற்கு வேறு வழியிருப்பதாக தெரியவில்லை என்றார்.

படேலுக்கு காந்தி எழுதிய கடிதத்தில் it seems that you feel perplexed..Jawaharlal did so of course, but I thought that he would understand the step after a while என எழுதினார். நேரு ஆரம்பத்தில் ஏற்காவிடினும் விரைவில் தனது நடவடிக்கையை புரிந்துகொள்வார் என்ற நம்பிக்கைதான் இங்கும் காந்தியிடம் வெளிப்பட்டது.

நேரு கடுமையான வேதனையில் இருந்தார் . நேரு எழுதினார்

A vast distance seemed to separate him ( Gandhiji) from me…of many hard lessons that I had learned, the hardest and most painful now faced me- that it is not possible in any vital matter to rely on anyone. One must journey through life alone, to rely on others is to invite heartbreak.

முக்கிய அம்சங்களில் எவரையும் நம்பிய பயணம் சாத்தியமில்லை. அது மனவலியை வேதனையே தருகிறது. வாழ்வில் தனித்த பயணம் என்ற மனநிலையில் நேரு இருந்ததைக் காண்கிறோம்.

சோசலிஸ்ட் தலைவரான சம்பூரானந்த் ஒருபடி மேலே போய் காந்தியை கைவிடுவோம் என பேசினார். ஒரு நேரம் காங்கிரஸ் இப்படி செய்யவேண்டும் என்கிறார், வேறு ஒரு நேரம் சுயராஜ்ய கட்சிக்காரர் அவர்கள் வேலையை

செய்யவிடுவோம் என்கிறார். நம்மீது பலவீன ஊசியைப் போட்டு சூழலை விஷமாக்குகிறார். இனி காந்தியை ஒரே தலைவர் என ஏற்காமல் இருப்பதே நல்லது. ஒரு கருவி பயனளிக்கவில்லையெனில் கருவியை மாற்றுவதே நல்லது என சம்பூரானந்த் பேசியதைக் காண்கிறோம்.

சம்பூரானந்த் கோபத்தை பரிவுடன் பார்த்த காந்தி, என் சிந்தனை செயலை எவர் மீதும் திணிப்பதில்லை அவற்றின் நிழல் காங்கிரஸ் மீது படவேண்டியதும் இல்லை என்றார். நாட்டின் சூழலில் சரியெனப்படுவதை காங்கிரஸ் செய்ய விரும்பி சொல்கிறேன் என்றார் காந்தி.

சில நேரங்களில் law makers - law breakers ஆகவும் இருக்க நேரலாம். நல்ல கேடர்களை, மிக உயர்ந்த பயிற்சியுடன் பக்குவப்பட்டவர்களை எல்லாம் சிறைக்கு அனுப்பிவிட்டு, முற்றிலும் தங்களை இன்னும் தயார்படுத்திக்கொள்ளாதவர்களை மட்டும் வைத்துக்கொண்டு பெரிய இயக்கம் நடைபோட முடியாதென்றார் காந்தி.

எடுத்த உறுதிமொழி சபதத்தை விட்டுவிடலாமா என்ற கேள்விக்கும் அவர் பதில் தந்தார்.

If someone who took a vow faced a situation he had not dreamt of when taking vow, he would not be bound to keep the vow

காந்திக்கும் ஏனைய பிறருக்குமான அடிப்படை வேறுபாடு முக்கிய பார்வை ஒன்றில் இருப்பதாக தெரிகிறது. அவர் காலத்தில் இருந்த அனைத்து தலைவர்களும் மற்றவர் என்ன செய்யவேண்டும் என எதிர்பார்த்தார்கள்- அது நடக்கவில்லையெனில் கோபம் அடைந்தார்கள் மனம் உடைந்தார்கள் - விமர்சித்தார்கள் - சிலர் blame game செய்தார்கள். காந்தியோ நிலவும் குறிப்பிட்ட சூழலில் தான் செய்யவேண்டியது என்ன, அதை எவ்வளவு அறம் சார்ந்து செய்யவேண்டும் என்பதாக செயல்பட்டார். அதை பின்பற்றி வருபவர்களிடம் அதே அறம் கடைபிடிப்பது நல்லது என சொல்லிவந்தார்.

காந்திக்கு அறம் எனப்படுவது தன் செயல்பாடுகளின் அடிப்படையில் மய்யம் கொள்வதாக இருந்தது. In the given situation, righteousness of self என்பதாக இருந்தது. பிறர் எப்படி இருக்கவேண்டும் என்கிற உபதேசங்கள் மட்டுமே இங்கு அறம் என புரிந்துகொள்ளப்பட்டுள்ளது- எப்போதும் 'பிறரின் அறம்' மட்டுமே பாடு

பொருளாக்கப்படுகிறது. சுயம் குறித்த விசாரணையில்லாமல், பிறர் குறித்த வம்பளப்பாக வாழ்க்கை நகர்த்தப்படுவதைக் காண்கிறோம்.

என் கடன் என் கடமை என்பதில் தனிச் சிறப்பு ஒன்றும் இல்லை. என்னை நேர் செய்துகொள்வதன் மூலம் சமூகத்திற்கு என் பங்களிப்பைத் தருகிறேன் என்கிற exemplary வாழ்க்கைமுறையையே காந்தி சோதித்தார்.

Nov 19

Thiru A Raja MP DMK wrote so

Nehruvian Ideology continues to be relevant even today for fending off the dark forces of communalism and to keep the light of secular democracy burning. Only then can we foster amity and prosperity for all our citizens without discrimination.

முன்னாள் மத்திய அமைச்சரும் திமுக நாடாளுமன்ற உறுப்பினருமான திரு அ ராஜா அவர்கள் எழுதிய essay - Nehruvian Ideology its determination and denigration என்பதை தமிழ்நாடு காங்கிரசின் லீகல் செல் சேர்மன் கே சந்திரமோகன் அவர்கள் சிறு வெளியீடாக கொண்டுவந்துள்ளார்கள்.

அதில் திரு ராஜா அவர்கள் காஷ்மீர் 370 சிறப்பு அந்தஸ்து உருவாக்கப்பட்ட சூழல், நேரு படேல் தோழமை கூட்டுப் பொறுப்புடன் செயலாற்றியமை, நேருவின் மதச்சார்பின்மையின் அவசியம் போன்ற அம்சங்களை சுட்டிக்காட்டி அந்த கட்டுரையை எழுதியுள்ளார். திரு ராஜா ஆங்கில இந்து பத்திரிகை 27-5-2020 ல் எழுதிய continue India's tryst with Nehruvian ideology என்பதின் விரிவடைந்த கட்டுரையாக இந்த பிரசுரம் அமைந்துள்ளது.

20 பக்க அளவிலான சிறு பிரசுரம்தான். வாய்ப்புள்ளவர் படிக்கலாம். காங்கிரஸ் பிரிவின் ஊடக பொறுப்பாளர் எழுத்தாளர் சிந்தனையாளர் திரு ஆ கோபண்ணா அவர்கள் இந்த பிரசுரத்தை தந்தார். முக்கியமாக அவரின் புகழ் வாய்ந்த மாமனிதர் நேரு - அரிய புகைப்பட வரலாறு என்கிற 600 பக்க அளவிலான பெரு நூலை தந்தமைக்கும் எனது நன்றி.

ஆ கோபண்ணா எழுதிய மாமனிதர் நேரு குறித்து மேம்பட்ட புரிதலை தன் காந்தி கல்வி நிலைய புதன் உரையிலும், அறிமுக கட்டுரையிலும் எழுத்தாளர் தோழர் பாவண்ணன் விரிவாக சொல்லியுள்ளார். வாய்ப்புள்ளவர் அறிந்துகொள்ளலாம்.

Nov 18

ஹரிஜன யாத்திரையின் போது காந்தி பெரும் விவாதங்களை சந்திக்க நேர்ந்தது- உருவாக்கவும் நேர்ந்தது.

மலபார் பகுதியில் அவர் பொது கருத்தொன்றை வெளிப்படுத்தினார். அது எந்த இசத்திற்கும் பொருந்தக்கூடிய ஒன்று. அவர் எப்போதும் புறமாறுதலுக்கான அக அழகை தேடிக்கொண்டிருந்தவர். இந்துக்கள் தீண்டாமை என்கிற அம்சத்தில் சாஸ்திரங்களை தேடிக்கொண்டிருக்காமல், தங்களை அகழ்ந்து பார்க்காவிடில் அவர்கள் தூக்கிப் பிடிக்கும் இந்து மதமோ சாஸ்திரங்களோ இருக்காது என்பதை உணர்த்தினார்.

Many a civilisation had perished because of the inherent weakness of their representatives. Hinduism would not be an exception என அவர் சொல்லிவந்தார்.

மிக நெருக்கமாக நேர விரயமின்றி நெருக்கடியுடன் தான் அவரது பயணத்திட்டம் 1934 ல் அமைக்கப்பட்டிருந்தது. 'சாஸ்திர வேலை' மட்டுமே வைத்திருந்த சில சனாதன குழுக்கள் அவரை ஆங்காங்கே வம்புக்கு இழுத்தன. நெல்லூர் பகுதியில் அவர்கள் அதில் full timers என்கிற சிறப்பு உரிமைக்கோரல்களை வெளிப்படுத்தினர். சமஸ்கிருத நூல்களிலிருந்து உரையாடத் தயாரா என புலமை காய்ச்சலை வெளிப்படுத்தினர். காந்தி அவர்களிடம் உரையாடுவதிலோ, தான் செய்வது தவறு என உணர்த்தப்பட்டால் திருத்திக்கொள்வதிலோ எந்த பிரச்சனையும் இல்லை. ஆனால் விவாத நேரம்- நாள் இடத்தை தேர்வு செய்திட தனக்கு சுதந்திரம் வேண்டும். திட்டமிட்ட பயணத் தடத்தில் இருப்பதால் அவ்வாறு சொல்லவேண்டியுள்ளது என்றார் காந்தி. அந்த பிராமணர்கள் அதை ஏற்கவில்லை.

பட்டாம்பியில் அவர் மனிதன் மனிதனை தொடக்கூடாது பார்க்கக்கூடாது என்பதற்கு எந்த கடவுளின் ஆணையும் தனக்கு தெரிந்து இல்லை என்றார். இதில் கர்ம பலன்கள் என பேசுவதெல்லாம் ஏற்புடையதல்ல என்றார். தனக்கு தெரிந்து பிராமணன் என்றால் யார் என விளக்கினார்.

A Brahmin was one who had humility, piety, self effacement and knew Brahman.

ஜனவரி 2 1934 கடப்பாவில் அவரிடம் கேள்வி ஒன்று முன்வைக்கப்பட்டது. வர்ணா சாதி என்பதன் வித்தியாசம் என்ன என்பது கேள்வி. அவர் வர்ணா என்பதை தான் புரிந்துகொண்டுள்ளது எப்படி என விளக்கினார். நாம் இன்று வைத்துள்ள புரிதலிலிருந்து அதைப் பார்த்தால் சரியாக விளங்கிக்கொள்ளமுடியாது. அவர் எப்படி விளக்கினார் என்பதை நேர்மையாக பார்த்தோம் என்றால் அதை bias இல்லாமல் உள்வாங்கமுடியும்.

வர்ணா முறை என்பது கடமைகளை முன் நிறுத்தும் பொருளாதார ஏற்பாடு. மேல் கீழ் என்கிற உயர் அடுக்குமுறையன்று. பக்கவாட்டில் கடமைகளை மேலானதாக நிறுத்தி சமூகத்தை செயல்படுத்தும் முறை. அதில் சிறப்பு சலுகை அல்லது வழிபாட்டு மேலோர் , ஒதுக்கப்படும் கீழோர் தன்மை கிடையாது. எங்கு வர்ணத்தை மேல் கீழ் என்று ஆக்குகிறோமோ அங்கு தீங்கின் ஆட்சி துவங்கிவிடுகிறது என்பதாகவே அவர் புரிதல் இருந்தது. தீண்டாமையை நம்மால் முற்றிலுமாக சாய்த்து விட முடியும் என்றால், சாதி ஆட்டம் காணும் என அவர் நம்பி செயல்பட்டுக் கொண்டிருந்தார்.

ஹரிஜன் சேவா சங்கம் அமைப்பு அதில் எவர் பணியாற்ற இயலும்- ஹரிஜனங்கள் அதை எந்த வகையில் அணுகமுடியும் என்ற விவாதத்திற்கும் அவர் தனது விளக்கத்தை தந்தார். ராஜமுந்திரியில் டிசம்பர் 24/ 25 1933ல் இந்த விவாதம் நடந்தது.

Harijan Sevak sangh was not an organisation of Harijans. It was an organisation of caste Hindus. It was an organisation of debtors not of creditors. What the Harijan had to do was to see that the debtors discharged their responsibility properly

காந்தியின் ஹரிஜன் யாத்திரை என்பது தீண்டாமை ஒழிப்பு என்பதுடன் இந்து மதத்தை சாஸ்திர விற்பன்னர்கள் என்ற பெயரில் மாறா கொள்கையாளர்களிடமிருந்து அதனை விடுவிக்கும் இயக்கமாகவும் இருந்ததாக தோன்றுகிறது. எங்குமே புரோகித priesthood அதன் பிடிவாதத்தை காட்டிக்கொண்டேயிருக்கும். சிறப்பு சலுகைகளை கோரிக்கொண்டேயிருக்கும்.

இந்துயிசம் மட்டுமல்ல எந்த இசமும் அதன் புரோகித இறுக்கங்களை வைத்துக்கொண்டேயிருந்தால் பின்னடைவை மட்டுமே சந்திக்க நேரலாம்.

உண்மையைத் தேடல் என்பதற்கு எந்த இசத்திற்கும் புரோகித வழிபாடு வழியல்ல போலும்.

nov 14

நவ இந்தியாவின் சிற்பி ஜவஹர்லால் நேரு அவர்களின் 134 வது பிறந்தநாள் விழா கருத்தரங்கம் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி தலைவர் திரு கே எஸ் அழகிரி அவர்கள் தலைமையில் சென்னை சத்தியமூர்த்தி பவனில் நடைபெற்றது.

இந்நிகழ்வில் முன்னாள் அகில இந்திய காங்கிரஸ் செயலாளர் திரு கேப்டன் பிரவீன் தவார், எழுத்தாளர் திரு ஆர் பட்டாபிராமன், பத்திரிகையாளர் திரு ரதம் சந்திரசேகர், சிறுபான்மையர் நலவாரிய தலைவர் திரு பீட்டர் அல்போன்ஸ, தமிழ்நாடு காங்கிரஸ் துணைத் தலைவர்கள் திரு ஆர் கோபண்ணா திரு பொன் கிருஷ்ணமூர்த்தி, திரு. பலராமன் ஆகியோர் கலந்துகொண்டு கருத்துரை ஆற்றினர்.

nov 13

When Gandhiji fighting the battle against untouchability, there were groaning from some quarters to postpone that until freedom was achieved. Rajaji replied back in his own style “ I would like to know if any persons quarrelling over the ownership or enjoyment of any piece of land would postpone their suit until Swaraj fight is finished... Rajmohan Gandhi

nov 13

புரட்சி குறித்து நேரு

புரட்சி என்பதே கட்டுமானமல்ல..தடைகளை அகற்றும் பணியது. புரட்சிக்குப் பின்னர்தான் கட்டுமான வேலைகள்

புரட்சிகரமான இயக்கம் எப்போதும் நிலையாக இருக்கமுடியாது. புரட்சி - நிலையானது என்கிற இரு சொற்களும் முரண்பட்டவை.

புரட்சிகர நடவடிக்கைகள் இயக்காற்றலுடன் இருக்கவேண்டும். இயக்காற்றல் மறைந்தவுடன் புரட்சிகர கூறும் மறைந்துவிடும்.

புரட்சியும் ஒரே இடத்தில் நிலையாக இருக்கமுடியாது. அது ஒவ்வொரு காலடியாக வைத்து முன்னே செல்கிறது- அல்லது பின்னால் தளர்ந்து சென்று விடுகிறது.

புரட்சி மக்கள் மனோபாவத்தைப் பெரும்பாலும் பொறுத்திருக்கிறது. உளவியல் அம்சத்தில் கவனம் தேவை. மக்களின் மனோபாவ விளைவுகளுடன் நெருக்கமான இயக்கத்திற்கு இது அவசியம்.

மக்களை வீரமாக செயல்படும்படி சில காலம்தான் தூண்டமுடியும். இலட்சியம் ஈடேறும்போது நமது பொருளாதாரநிலை உயரும் என்கிற நம்பிக்கை அவர்களுக்கு ஏற்படவேண்டும்.

புரட்சிகர இயக்கத்தில் மேலிருந்து கீழாக அல்லாமல், கீழிலிருந்து மேலாகத்தான் பலம் வளரமுடியும். ஸ்தாபனத்தின் அடிமட்ட மக்களை உரிய தகுதியுடன் வைத்திருப்பதற்கான முயற்சி இன்றியமையாது. அவர்களை அதிகமாக முன்முயற்சி செய்திட, புதிய திசையில் இயங்க அனுமதிக்கவேண்டும்.

( 1930 டிசம்பரில் நைனி சிறையில் எழுதியதிலிருந்து)

நேரு நவ 7 1936 ல் கல்கத்தாவில் பேசியதிலிருந்து..

சோசலிசத்தைப்பற்றி புலமையும் விஞ்ஞானமுறையும் அமைந்த உரையை என்னிடத்தில் எதிர்பார்க்கவேண்டாம். சமூகம் வளர்ச்சி அடைகிறபோது எப்படி மாற்றமடைகிறது என்பதை மார்க்ஸ் விளக்கினார். முதலாளித்துவம் தன் கடமையை நிறைவேற்றிவிட்டது. ஆனால் செல்வத்தை விநியோகிக்கும் பிரச்சனையை தீர்க்கவில்லை.

விவசாயிகள், தொழிலாளர் பயன்படுத்துகிற மொழியில் நாம் பேசவேண்டும்.அவர்கள் புரிந்துகொள்ள முடியாத கோஷங்களில் பேசக்கூடாது. சில சொற்றொடர்கள், கோஷங்களை வைத்துக்கொண்டு சோசலிசம் பற்றி பேசுவதைக் கேட்கும்போது எனக்கு நடுக்கம் ஏற்படுகிறது. சோசலிசத்தில் வறட்டுத்தனம் கூடாது.

சட்டத்தால் சோசலிசம் வந்துவிடாது. நாம் சோசலிசத்தை விரும்பினால், அதற்கு மனிதர்களை தயார் செய்யவேண்டும். மொத்த தலைமுறைக்கும் கற்பித்தலைப் பற்றிய பிரச்சனையாக அது இருக்கிறது

nov 12

எவரையும் இகழாத மன ஒளி ஏற்றுவோம்

உலகம் ஏக சிந்தனையின் உறைவிடமல்ல. உலகின் இயல்பே அதன் இயக்கமே பன்முகத்தன்மையிலானது. என் செயலே என் சிந்தையே சிறந்தது- அதுவே புனிதம் சாசுவதம் என்கிற எண்ணம் ஒருவருக்கு இருப்பதை புரிந்து கொள்ளலாம். ஆனால் அதை ஏற்காத வேறு வகை சிந்தனைகளை, செயல்களை கீழானது, சிறுமையானது , ஒழிக்கப்படவேண்டியது என ஒருவர் தொடங்கும் ஆட்டம் ஒருவகை நோய்க்கூறே. இதன் பிரம்மாண்டம்தான் பாசிசமாகிறது.

ஒருவருக்கு நம்பிக்கை எனப்படுவதை அவரது commitment என்கிற அளவில் செயல்படுத்தும்போது அது மௌனமாக அடக்கமாக இருந்து மன அமைதியைத் தேடித்தரும். அதையே உலகின் ஈர்ப்பிற்காக overdoing ஆக செய்யும்போது, வெறும் கூச்சலாக சத்தமாக ஸ்வரம் மாறிப்போகும்.

அவரவர் அனுபவங்களில் தன் சிந்தை செயலுக்கு சிறப்பு சலுகை கோராத , தனி மேடை அமைக்காத , பிறரை சிறுமைப்படுத்தாத புறங்கூறாத அமைதியைப்பெறுவோம்.

அனைவருக்கும் தீபாவளி நல்வாழ்த்துகள்!

nov 11

1932ல் குருவாயூர் கோயிலில் தாழ்த்தப்பட்டவர் நுழைவதற்கான போராட்டம் ஏற்பட்ட நிலையில், கோயில் நுழைவு குறித்த ஆரோக்கிய விவாதமும்- கருத்தொற்றுமையும்- சாதி இந்துக்களிடம் வரவேண்டிய மனமாற்றமும் குறித்து காந்தி பேசலானார்.

வைஸ்ராய் ஒப்புதலுக்காக டாக்டர் சுப்பராயன் மசோதா, 1933 ரங்கா அய்யர் மசோதா விவாதப் பொருளாகவும் இருந்தன. மாளவியா பனாரசில் ஏதும் செய்யாமல், இங்கே குருவாயூரில் செய்ய வந்தால் சனாதனிகள் விமர்சிப்பர் என்கிற ராஜாஜி எச்சரிக்கையும் இருந்தது.

எரவாடா சிறையில் புனே ஒப்பந்தம் முடிந்த நிலையில் இருந்த காந்தியிடம், அனைத்திந்திய வர்ணாஸ்ரம சுயராஜ்ய சங்கம் என்கிற அமைப்பு விவாதம் ஒன்றிற்கு ,சாஸ்திரங்களை விளக்குவதில் மாறுபட்ட இரு தரப்பார் இடையில், ஏற்பாடு செய்யக் கோரியிருந்தது.

தீண்டாமையை சாஸ்திரங்கள் பேசுகின்றனவா - கோயில் நுழைவை அவை தடுக்கின்றனவா என்பது விவாத மய்யமாக இருந்தால் நலம் என அவ்வமைப்பினர் கோரினர்.

சரி. டிசம்பர் 23 1932 ல் அந்த விவாத அமர்வு இருக்கலாம்..அதில் pro changers - no changers கலந்துகொண்டு தங்கள் பார்வையை தெளிவுபடுத்தப்பட்டும் என காந்தி மறுமொழி தந்தார்.

இந்தப் பகுதியில் சுசிலா நாயர் தனது வால்யூம் 7 ல் தந்திருக்கும் வரிகள் இங்கு தரப்படுகிறது. வரிசையை மட்டும் நான் மாற்றித் தந்துள்ளேன்.

He ( Gandhiji) formulated a set of questions for the Shastris to decide upon. These were

1. What are Shastras?

2. How is the authoritative ness of the Shastras proved?

3. How will the differences arising over the definitions or interpretations of Sastras be decided?

4. Define untouchability according to shastras

5. Can the definition of untouchability given in the shastras be applied to the so called untouchables of the present day?

6. What are the restrictions imposed by shastras on the untouchables?

7. Can an individual be free from the untouchability in his own life time?

8. What are injunctions of the shastras regarding behaviour of the touchables with the untouchables?

9. Under what circumstances will the shastras permit temple entry by the untouchables?

10. What are your conclusions?

மேற்கண்ட 10 கேள்விகளை விவாதத்திற்காக காந்தி முன்வைத்ததைக் காண்கிறோம். ஒவ்வொரு நம்பிக்கையாளருடனும் எவ்வளவு பொறுமையாக பொறுப்புணர்வுடன் விரும்பக்கூடிய மாற்றங்களை எதிர்ப்பவரின் மனமாற்றத்துடன் கொணர அவர் விரும்பி செயலாற்றியுள்ளார் என்பதற்கு இந்தப் பகுதியும் சாட்சியாக நிற்கும்.

முத்திரை குத்தி கிண்டிக் கிளறி அடையாள அரசியல் செய்யும் காலத்தில் , பொறுப்பான பொறுமையான பல்வேறு தரப்புகளை காதுகொடுத்து கேட்டு, விரும்பக்கூடிய மாற்றங்களுக்கு அழைத்துச் செல்லும் -அரசியல் சமூக உரையாடல்கள் பெருகாதா என்ற எண்ணம் தாகமாக மேலிடுகிறது

nov 10

வெள்ளிக்கிழமை அன்று - நவ 10 , 2023 #புதியதலைமுறை தொலைக்காட்சியில் #வட்டமேசைவிவாதம் என்ற ஒன்றை தற்செயலாக பார்க்க நேரிட்டது.

அதில் பங்கேற்றவர்களில் ஒருவர் காந்தி பற்றிய உரையாடலில், அடுத்த பிறவியில் மலம் அள்ளுவராக பிறக்க விரும்புகிறேன் ( பங்கி என காந்தி சொன்னதை) என்று காந்தி சொன்னதாகச் சொல்லி- இந்த பிறவியில் என்னாச்சு என்பது போன்ற வரிகளை கேட்க , பார்வையாளர்களில் சிலர் அதை கைதட்டி வரவேற்றதைப் பார்த்தேன்.

பேசியவர்க்கு காந்தி பற்றிய வாசிப்போ புரிதலோ இல்லை எனத் தோன்றுகிறது. காந்தி காங்கிரஸ் மாநாட்டில் , அவர் மகாத்மாவாக பிரபலம் ஆவதற்கு முன்னரே இந்த மலம் சுத்தம் செய்யும் வேலையை செய்தவர். ஆசிரமத்தில் வினோபா போன்றவர் அதைச் செய்தனர். உப்பு சத்தியாகிரக பாதையிலே கூட மலம் குறித்த விதிகளை காந்தி உட்பட பங்கேற்றவர் மேற்கொண்டனர்.

காந்தி குறித்து பேசியவரை #புதிய தலைமுறை #நெறியாளர் சரி செய்ய முன்வராததுடன், பங்கேற்றவர்களில் வாசிப்பு பழக்கம் கொண்ட விவரமான #பழ. கருப்பையா கூட தவறு என சுட்டிக்காட்டாமல் இருந்தது வருத்தத்தை தருகிறது. உண்மைக்கு மாறாக காந்தி குறித்த செய்திகளை வெளிப்படுத்த அனுமதிப்பது பத்திரிகை அறமாகுமா?

பென்சன் nov 10

PBCAT Delhi and Options for DOT

The pensioners folk of BSNL retired before 1-1-2017 and retiring after that date are eagerly waiting for the fate of the judgment given by PBCAT regarding pension revision analogous to Central Pay Commission.

The direction given to the authorities concerned ,speaks a period of 10 weeks ,which is fast approaching. It is difficult to predict what DOT is going to do on that judgment. The options are more.

My common sense tells me three options before DOT

1. DOT may find ways and means to implement the judgment in verbatim

2. DOT may feel negative about that judgment, stating implementation beyond its purview as per the existing rules or absence any specific rules for pension revision. It may prefer appeal to nullify the PBCAT judgment

3. The third option is little bit moderate one. They may show willingness, as decided and presented in Oct 17 th meet of 2022, for pension revision with the possible modality already drawn without affecting both pre and post 2017 pensioners' claims. Accordingly, they may prefer appeal to seek modification of the judgment, while accepting the issue of pension revision.

Between 'yes and no' there is a middle path a kind of 'also- not also' position for DOT. I feel , this- position if DOT takes , may safeguard the claims of all the stakeholders and may avoid further litigations and delays in settling the issue of pension revision.

Expecting DOT to honour its position, that is , it is

for pension revision even in the absence pay revision , is not an unfair one. Taking care of all the stakeholders like pensioners associations for pension revision, trade unions for pay revision, this 3 rd option may be a via media and fair method that would solve the issues without affecting any sections- pre or post 2017

12.30 hrs 10-11-2023 -R.Pattabiraman

nov 9

நேரு இவ்வாறு எழுதினார்

1939 பிப்- மார்ச் நேஷனல் ஹெரால்ட் கட்டுரைகளிலிருந்து..

சொற்றொடர்களும் கோஷங்களும் சிந்தித்து உருவாக்கப்பட்ட குறிக்கோள்கள், வழிமுறைகள் ஆகியவற்றுடன் இணைந்திராவிட்டால் அதிகமான ஆபத்தை உருவாக்கும்.

மார்க்சியத் தத்துவம் அதன் பொதுப்படையான பொருளில் என்னைக் கவர்கிறது, வரலாற்று நிகழ்வுப் போக்குகளை அறிந்துகொள்ள உதவுகிறது. நான் சனாதன மார்க்சியவாதி அல்ல, எத்தகைய சனாதன முறையும் என்னைக் கவரவில்லை.

சமத்துவம் இல்லாவிட்டால் விடுதலைக்கும் ஜனநாயகத்திற்கு பொருளில்லை..சோசலிச அமைப்பில் தனிநபருக்கு அதிகமான சுதந்திரம் ஏன் இருக்கக்கூடாது என்பது எனக்குத் தெரியவில்லை.

மார்க்சியமும் சோசலிசமும் வன்முறையை வலியுறுத்தும் கொள்கைகள் அல்ல..ஒரு சோசலிஸ்ட் அல்லது கம்யூனிஸ்ட் அகிம்சையை பெயரளவில் ஆதரித்துவிட்டு வேறு விதமாக செயல்படும்போது அவர் சொற்களுக்கும் நடவடிக்கைகளுக்கும் சம்பந்தமில்லை என்று மக்கள் நினைக்குமாறு நடந்துகொள்கிறார்.

காந்தியம் மிகவும் நவீனமானது, ஓரளவு நம் காலத்திற்கு முந்திய சிந்தனையாக இருக்கின்றது. ஆனால் மேற்கு நாடுகளின் நவீனத் தன்மையிலிருந்து வேறுபட்டிருக்கிறது.

காங்கிரசை குறுங்குழு அமைப்பாகக் கருதமுடியாது. அது நாட்டை பிரதிநிதித்துவம் செய்கிறது…உண்மையான இடதுசாரிகள் வலிமைப்பெற்று காங்கிரசை தங்கள் கொள்கைப்படி நடத்துகிற காலம் வரும். ஆனால் இடதுசாரிகளிடம் ஏராள குழுக்கள் இருக்கின்றன. ஒவ்வொரு குழுவும் ஒவ்வொரு வழியில் செல்கிறது. தோழமை கிடையாது. பொது எதிரியைக்காட்டி தற்காலிகமாக ஒன்று சேர்கின்றன. ஆனால் இணைப்பு சீக்கிரம் அறுந்து விடுகிறது.

சோசலிஸ்டுகளாக இருப்பவர்கள் வரலாற்று பின்புலத்தில் நமது இயக்கத்தைப் பார்க்கவேண்டும். வளர்ச்சி கட்டத்தின் தேவை என்ன என்பதை உணரவேண்டும். இன்று அதிகமாகத் தாவினால் நாளை விளைவை சந்திக்கவேண்டும். இன்று இடதுசாரிகளால் அழிக்கத்தான் முடியும்- கட்டமுடியாது. இன்னும் கிளர்ச்சி உலகத்தில் இருக்கிறார்கள். தமது வரலாற்றுப் பாத்திரத்தை உணர்ந்திருந்தால் அதற்குத் தம்மைத் தயாரித்துக்கொள்ள வேண்டும்.

- அர்ஜூன் தேவ் எழுதிய நேரு போராட்டக்கால சிந்தனைகள் தமிழில் நா தர்மராஜன் பக் 202-17 அத்தியாயம்

nov 8

I happened to see fb posting of com SSG of Coimbatore, a great leader of Telecom movement- his participation and giving speech at AUAB ( all TU platform). The unions are demanding implementation of 3 rd PRC from 1-1-2017 for all those employees on roll on that day. This means they are demanding 3 rd PRC to those who 'were members' and subsequently retired and to members / employees working that is their ' are members' as on date.

The pensioners associations are demanding vociferously the implementation of 7th CPC to not only those retired before 1-1-2017 but also retiring after 1-1-2017, as they are having a PBCAT judgment in their hand.

The beauty is the union leaders functioning in various districts are going and giving solidarity to the demand of 7 th CPC of pensioners associations, and in turn the association leaders of pensioners are going and supporting the demand of 3 rd PRC of the unions.

Some pensioners associations who are demanding 3 rd PRC for pensioners also waiting for DOT' action without pressing their demand after seeing pBCAT on CPC.

Post 2017 employees are now in fix and waiting which way their fate is going to be decided. Those who strongly belief the inter connectivity of pre and post 2017 are also waiting for the reaction of DOT. It seems that everyone is understood that they cannot be in hurry to get their benefits

15 hrs Nov 8 th 2023 R. Pattabiraman

Nov 8 ( reposting of 2022)

இஸ்தியாக் அகமது எழுதிய வரலாற்றில் ஜின்னாவின் பாத்திரம்- அவரது வெற்றியும் தோல்வியும் என்கிற பெரிய புத்தகத்தை படிக்க ஆரம்பித்தேன். 800 பக்க அளவிலான உயர அகல பெரிய புத்தகம்தான். 2020ல் பெங்குவின் வெளியிட்டுள்ளனர்.

ஜின்னா அவர்களின் அரசியல் செயல்பாடுகள், சிந்தனை மற்றும் உரைகளை ஆய்விடும் ஆக்கத்தை இஸ்தியாக் அவர்கள் செய்துள்ளார். ஜின்னா தனியாக காந்தி, நேரு போல புத்தகம் ஏதும் எழுதியவரில்லை. அவர் சிறந்த புகழ்வாய்ந்த வழக்கறிஞர் என்பதை அவர் வாதங்கள் புலப்படுத்தும். பொதுவாக சட்டப்புத்தகங்கள், செய்தித்தாள்களை மட்டுமே அவர் படிப்பவராக இருந்தார். கோட்பாடு கொள்கை சார்ந்த புத்தகங்களையோ அல்லது நாவல்களை படிப்பதிலோ அவர் ஆர்வம் காட்டியதில்லை என இஸ்தியாக் சொல்கிறார்.

இஸ்தியாக் ஸ்வீடன் ஸ்டாக்ஹோம் பல்கலை அரசியல் துறை பேராசிரியர். சிங்கப்பூர் பல்கலையிலும் தெற்காசியா ஆய்வு மய்யத்தின் ஆய்வாளர். ஏராள புத்தகங்களை எழுதியிருப்பவர்.

பாகிஸ்தான் எனும் தனிநாடு பிரிவினைக்கு ஜின்னாவிற்கு பங்கிருக்கிறதா இல்லையா -காங்கிரஸ் அதை அவர் மீது திணித்ததா என்ற விவாதத்தை இந்த புத்தகம் தீவிரமாக நடத்தியுள்ளது. ஜின்னாவிற்கு பங்கில்லை என பாகிஸ்தான் எழுத்தாளர்களால் ஆய்வு என்ற பெயரில் வெளியிடப்பட்டிருக்கும் ஆக்கங்கள் factual ஆக சரியா என்பதை பேரா இஸ்தியாக் விரிவாக ஆய்விட்டுள்ளார். ஜின்னா மீதான வெறும் புகழ்பாடாலான ஆய்வுகளையும், அவர் மீது அனைத்து குற்றப்பத்திரிகை வைக்கும் ஆய்வுகளின் மத்தியில் ஜின்னாவின் உரைகளிலிருந்து தன் ஆய்வை நகர்த்துகிறார். அவரது இருதேச கொள்கை மீதான தன் ஆய்வையும் தருகிறார்.

ஜின்னாவின் இருதேச கொள்கையை வலியுறுத்திய பாகிஸ்தானை ஏதோவொரு வகையில் கோருகின்ற மார்ச் 22, 1940 லாகூர் உரை, அதேபோல் பாகிஸ்தான் அரசமைப்பு அசெம்பிளியில் விடுதலைக்கு முன்னர் ஆகஸ்ட் 11, 1947ல் முஸ்லிம் இந்துக்கள் பாகிஸ்தானில் சமதையான குடிமக்கள் என ஒருதேசமாக

இருக்கவேண்டுவதை சொல்லும் உரை இஸ்தியாக் அவர்களால் விவாதிக்கப்பட்டுள்ளது.

ஜின்னாவின் வாழ்க்கை வரலாற்றை எழுதிய மிக முக்கிய ஹெக்டர் பொலிதோ, ஸ்டான்லி ஓல்பெர்ட், ஆயிஷா ஜெலால் ஆய்வுகளுக்கெல்லாம் அப்பால் 1911- 34 மற்றும் 1947-48 யை மட்டும் எடுத்துக்கொள்ளாமல் 1940-46 காலப்பகுதியை விவாதத்தில் முக்கியமாக்குகிறார் இஸ்தியாக்.

மேலும் பாகிஸ்தான் உதயத்திற்கு பின்னர் அங்கிருந்த இடதுசாரிகள் பங்கு குறித்தும் பேசுகிறார். ஜின்னா தனது முஸ்லிம் லீக் AIML கட்சியில் left forcesக்கு இடமில்லை என்றாராம்.

ஒன்றுபட்ட பிரிட்டிஷ் இந்தியாவில் சிபிஅய்ய்யின் 'அதிகாரி தீசிஸ் ' என்று சொல்லப்படும் தேசிய சுயநிர்ணய உரிமை ஆவணத்தில் முஸ்லீம்கள் தனி தேசிய இனப்பார்வை வெளியானதை இஸ்தியாக் குறிப்பிடுகிறார். அப்படி மதத்தை அடிப்படையாக வைத்து பார்த்தது மார்க்ஸியப் பார்வையில்லை எனவும் சொல்கிறார்.

ஆரம்ப பாகிஸ்தான் சோவியத் எதிர்ப்பு அமெரிக்க ஆதரவு நிலைப்பாட்டில்தான் நகர்ந்தது. 1954ல் பாகிஸ்தான் கம்யூனிஸ்ட் கட்சி தடையும் செய்யப்பட்டது. இராணுவத்தில் சோசலிச இடது ஆதரவாளர்கள் களையெடுக்கப்பட்டனர்.

இந்திய சீனா யுத்தம், ஜூல்பிகர் பூட்டோ வெளியுறவு அமைச்சராக இருந்தபோது அவர் பாகிஸ்தானை சீனாப் பக்கம் நகர்த்துவதில் வெற்றியடைந்தார். 1967ல் அவர் Pakistan People's Party உருவாக்கி 1971ல் ஆட்சிக்கும் வந்தார்.

இந்தக்காலத்தில் அவர் கட்சியில் இடது சிந்தனைகளுக்கு சற்று இடம் கிடைத்தது. இஸ்லாமிக் சோசசிசம் எனப் பலர் பேசினர். பாகிஸ்தானில் மாவோயிஸ்ட் இயக்கமும் செயல்பட வாய்ப்பு கிடைத்தது.

அங்கு Zahid Chaudhry போன்றவர்கள் மார்க்சிய பகுப்பாய்வில் இந்தியாவின் காங்கிரஸ் முஸ்லிம் அல்லாத பெரும் பூர்ஷ்வாக்களின் ஏகபோக கட்சி என வரையறை செய்தனர். அதை எதிர்த்து தேசிய முஸ்லிம் முதலாளிகளின் போராட்ட விளைவாகவே பாகிஸ்தான் உருவாக்கம் நடந்தது. முஸ்லீம் அல்லாத

இந்திய பெருமுதலாளிகளும் இதை விரும்பினர். முஸ்லிம் லீகை அவர்கள் வளர்ந்துவரும் தேசிய முதலாளிகளின் கட்சி என வரையறுத்தனர்.

இந்தியா பாகிஸ்தான் என்கிற பிரிவினைக்கு முஸ்லிம் அல்லாத ஏகபோக முதலாளித்துவ காங்கிரஸ்தான் பொறுப்பு என்கிற வரையறைக்கு பாகிஸ்தான் Maoist கள் வந்தனர்.

ஜின்னா பாகிஸ்தானின் உறுதி காட்டியிருந்தாலும், காங்கிரஸ் அதை மறுப்பதில் உறுதி காட்டியோ அல்லது சமரசம் செய்திருந்தாலும், இறுதி வார்த்தை பிரிட்டிஷ் அதிகார மய்யத்தில்தான் இருந்தது என்பது மறக்கப்படக்கூடாத ஒரு விஷயம் .

இந்தப் புத்தகம் ஜின்னாவின் நான்கு கட்டங்களை தீவிரமாக அலசுகிறது. ஜின்னா தேசியவாதியாக, ஜின்னா முஸ்லீம் கம்யூனிட்டேரியனாக, ஜின்னா இருதேசம் பேசி முஸ்லீம் தேசியக்காரராக, இறுதியில் பாகிஸ்தான் உருவாக்கியவர் என இந்த புத்தகத்தின் ஆய்வுப்பாதை நகர்வதைக் காணலாம்.

பெரிய புத்தகம்..எப்படி மேலும் செல்கிறது எனப் பார்க்கலாம்

ஆதாரம் : Jinnah His Successes, Failures and Role in History buy Ishtiaq Ahmed

nov 8

சுசிலா எழுதியுள்ள மகாத்மா வால்யூம் 7 மிக முக்கியமான நிகழ்வுகளின் தடங்களை விளக்கிச் சொல்லும் மதிப்புமிகு ஆவணமாக இருக்கிறது. Preparing for Swaraj என பெயரிடப்பட்ட 600 பக்க அளவிலான புத்தகமது. சுசிலாவின் பெரும் உழைப்பிற்கு சல்யூட். இந்த புத்தகமும் ஒரே பதிப்பு 1000 பிரதிகளுடன் நிற்பது நம் வரலாற்று உணர்வின் பிரதிபலிப்பா?

வட்டமேஜை மாநாடு, இந்தியாவில் ஒத்துழையாமை அடக்குமுறை, கம்யூனல் அவார்ட், காந்தி உண்ணா நோன்பு, ஹரிஜன் யாத்திரை, காங்கிரசில் விவாதங்கள், போஸ் போர்க்கொடி போன்ற பல்வேறு முக்கிய நிகழ்வுத் தடங்களை விவரிக்கும் ஆவணமிது.

லேபர் கட்சி தன் பெரும்பான்மை இழந்து , அதே நேரத்தில் டோரிக்களின் உதவியுடன் தேசிய அரசாங்கத்தை ராம்சே பிரதமராக நடத்திவந்தார். சாமுவேல்ஹோர் என்கிற இந்திய செயலர், இர்வின் போய் வில்லிங்டன் வைஸ்ராய் என்ற புதிய கூட்டணி, காங்கிரசை காந்தியை பலவீனமாக்கும் அனைத்து நடவடிக்கைகளையும் 1931-32ல் செய்யலாயினர்.

காங்கிரஸ் அமைப்புகள் தடைசெய்யப்பட்டன. தலைவர்கள் தொண்டர்கள் ஆயிரக்கணக்கில் தாக்குதலுக்கு உள்ளாக்கப்பட்டு சிறை பிடிக்கப்பட்டனர். செயலர் சாமுவேல் அப்படி ஒன்றும் காங்கிரஸ் இந்திய மக்களின் ஏகப்பிரதிநிதியெல்லாம் இல்லை. அவர்கள் போராடினால் எளிதாக ஒடுக்கிவிடுவோம். Let the dogs bark, the caravan will go on என பிரிட்டிஷ் நாடாளுமன்றத்திலேயே உச்சத் திமிருடன் பேசியதைக் காணமுடியும். சாமுவேல் ஹோர் பிரிட்டனுக்கு இந்தியாவில் நண்பர்கள் யார் எவர் எனக்காணத்தெரியும் என்றும் பேசினார். சாமுவேல் பிரிட்டிஷ் மக்கள் அவையில் ஜனவரி 28, 1932ல் பேசிய சில வரிகள்

“ ..the way the representative character of the Congress had been brought in question by the Aga Khan, who represented the great Muslim community, and DR. Ambedkar, the champion of the untouchables, how untouchables had started a riot in Bombay against an arrogant congress, on the day Gandhi landed in Bombay. Scores of millions of Indians, repudiated altogether the claim of congress to represent them.

These years of trail have made us to know our friends..”

அதே அவையில் பின்னர் விடுதலைக்காலத்தில் பிரதமரான கிளமெண்ட் அட்லியும், லான்ஸ்பரி எம்பி யும் சாமூவேல் பேச்சை கடுமையாக கண்டித்து உரையாற்றினர்.

Let us have an end to this nonsense about the Congress not representing this, and the people of India not wanting that..and let us say nothing more about depressed classes..I never heard any talk about taking care of these people until the question of self government reached its present stage **என்று** சாமுவேலின் நீலிக்கண்ணீரை விமர்சித்ததையும் காண்கிறோம்.

இந்த சாமுவேலின் டோரிகளின் கைப்பாவையாகவே ராம்சே செயல்பட நேர்ந்தது என்கிற வரலாற்று காட்சியை பார்க்கிறோம். பிரிட்டிஷாரின் பிரித்தாளும் சூழ்ச்சியை காங்கிரஸ் காந்தி வெறுப்பை , ராம்சே பின்னர் வெளியிட்ட கம்யூனல் அவார்ட் புலப்படுத்தியது என்பதையும் சேர்த்து பார்க்கமுடியும்.

nov 7

Preparing for Swaraj என தலைப்பிடப்பட்டுள்ளது மகாத்மா காந்தி வால்யூம் 7. சுசிலா நாயரின்( நய்யார்) தொடர் கடும் உழைப்பில் கிடைத்த மற்றொரு பொக்கிஷ பதிவு.

இந்த 7 வது நூல்தொகைக்கான வேலைகளை சுசிலா முடித்துவிட்டு செப்டம்பர் 1994ல் , இந்த பதிவு பேசப்போகின்ற 1932-39 காலத்தின் முக்கிய நிகழ்வுகளை அறிமுகத்தில் தொட்டுக்காட்டியுள்ளார். முன்னாள் குடியரசுத் தலைவர் திரு ஆர் வெங்கட் ராமன் தன் சென்னை வீட்டிலிருந்து ஜூன் 1995ல் சுருக்கமான முன்னுரை எழுதியுள்ளார். பியாரிலால் காந்தியிடம் பக்த தொண்டனாக இருந்ததையும், சுசிலா பெண் போல இருந்ததையும் சுட்டிக்காட்டி, மகாத்மா 10 வால்யூம் என்கிற பெரும் உழைப்பை அண்ணனும் தங்கையும் தந்து வருவதை பாராட்டி அங்கீகரித்திருப்பார். ஆர் வி அவர்களின் வரிகளில்

Pyarelalji was an outstanding intellectual endowed with keen sense of perception, objectivity and commitment to truth. If Pyarelal was a devotee of Gandhiji Dr Shushila was a daughter of the house.

I have the privilege of knowing Shushilaji for over forty years. She is one of those rare personalities on whom God had showered his choicest blessings. She combines in herself qualities like knowledge, wisdom, experience and competence on the one hand and virtues like integrity, dauntless courage ,devotion to duty and utter selflessness on the other

நவஜீவன் டிரஸ்ட் 1996 ல் சுசிலா மற்றும் அவரது அலுவலக ஆய்வு நண்பர்களின் உழைப்பை புத்தகமாக்கி கொணர்ந்தது. ஒரே பதிப்பு 1000 காப்பிகள் என்ற அளவில் தான் இந்த 7 வது வால்யூம் இதுவரை வந்ததாக அறிகிறேன். இந்தியாவில் தீவிர வாசிப்பு பழக்கம் உள்ளவர்கள் ஒரு கோடியாவது இருக்கலாம் என ஊகிக்கிறேன். அதில் காந்திய வாசிப்பில் இறங்கக்கூடியவர்கள் சில இலட்சங்களாவது இருப்பர்( இருப்பார்கள்தானே) . அவர்களின் பெரும் பசிக்கு இந்த வால்யூம் பெற்ற 1000 காப்பிகள் சோளப்பொறிதான்.

இணையத்தில் இந்த வால்யூம்கள் அனைத்தும் கிடைத்தாலும், 5000க்கும் மேற்பட்ட பக்கங்களை வாசிக்க முடியுமா என்பது கேள்விக்குறியாகவே இருக்கிறது. மத்திய அரசாங்கம் உதவி செய்து மலிவு பதிப்புகளாக பப்ளிகேஷன் டிவிஷன் வழியாக அல்லது நவஜீவனுக்கு மான்யம் கொடுத்து உதவி செய்து விலை குறைவாக கொணர்ந்தால், புதிய பதிப்புகள் கொணரமுடியும்.

மாநில அரசுகளும் தங்கள் மொழிகளில் இந்த 10 வால்யூம்களையும் கிடைக்க தந்தால், மேலும் புதிய வாசகப்பகுதிக்கு இந்தியாவின் விடுதலை வரலாற்றின் முக்கிய பகுதிகள் சென்று சேரும்.

பியாரிலால் சுசிலா தாங்கள் வாழ்ந்த காலத்திற்கான பெருங்கடமையை தங்களின் மேம்பட்ட உழைப்பால் செய்து சென்றுள்ளனர். அவர்களை வாசித்து அந்த உழைப்பை, காந்தியுடனான விடுதலைக்காலத்தை நுகரும் நன்றியறிதலையாவது செய்யமுடியுமா என்ற முயற்சிதான்…

nov 6

ஹமாஸ் பற்றி..

பாலஸ்தீன பிரச்சனையில் கடந்த 35 ஆண்டுகளாக அடிபடும் பெயர் ஹமாஸ். பாலஸ்தீனம் அங்கு வாழும் இஸ்லாமியர்களுடையது- அவர்களின் சகோதரத்துவத்திற்கானது என போர்க்குண ஆயுதப் போராட்டம் நடத்தி வரும் இயக்கம். இஸ்ரேலின் ஆக்கிரமிப்பை ஏற்காது அவர்களை வெளியேற்ற வேண்டும் என போராடும் அமைப்பும் கூட. சிறிய பகுதி காசாவை தங்கள் கட்டுக்குள் வைத்து செயல்பட்டு வரும் இயக்கம். அவர்களுக்கென அரசாங்கமுண்டு. இராணுவம் உண்டு. ராக்கெட் உண்டு.

ஹமாஸ் குறித்து அந்த இயக்கமே வெளியிட்டுள்ள சில மூல ஆவணங்களையாவது பார்த்து அவர்கள் குறித்து அறிந்துகொள்ள நினைத்தபோது, அவர்களின் 1988 சாசனம், 2017 சாசனம் என இரு முக்கியமானவை கிடைத்தன. ஹமாஸ் பற்றி பேசக்கூடியவர்கள் இந்த ஆவணங்களை குறிப்பிட்டும் பேசி வருவதையும் பார்க்கமுடிந்தது.

Harakat al-Muqawama al-Islamiya (“Islamic Resistance Movement”) என்கிற அமைப்பின் சுருக்கம்தான் ஹமாஸ். இஸ்லாமியர் எதிர்ப்பு இயக்கம்- (நலன்களை காக்கும் இயக்கம்) என அழைத்துக்கொள்கின்றனர். இதனை உருவாக்கியவர் ஷேக் அகமது யாசின் என்பார். இவர் எகிப்து கெய்ரோவில் இஸ்லாம் மத புலமையாளராக உருவாகியவர். ஆரம்பத்தில் காசா பகுதியில் துன்பப்படும் மக்களுக்கு ஆதரவான அறப்பணிகள் இயக்கத்தை உருவாக்கி, மக்களை திரட்டினார். பின்னர் 1987 டிசம்பரில் ஹமாஸ் உருவாக்கப்பட்டது.

1988ல் ஹமாஸ் தங்களின் கொள்கை திட்டத்தை ’சாசனமாக’ அறிவித்தது. மாறிய சூழல்களை கணக்கில்கொண்டு 2017ல் புதிய சாசனத்தை வெளியிட்டது. தாங்கள் யார், எதற்கு நிற்கிறோம், பகைவர் யார், என்ன செய்ய விழைகிறோம் , பாலஸ்தீன இஸ்லாமியர் கடமை என்ன என்பதையெல்லாம் இந்த சாசனங்கள் தெளிவுபடுத்துவதாய் அமைந்துள்ளன. இந்த இரு ஆவணங்களையும் கவனமாக வாசிப்பவர்கள் அவர்கள் கொள்கை கோட்பாடுகளை அறிந்துகொள்ள முடியும்.

’ பாலஸ்தீன அதாரிட்டி’ என்பதை இஸ்ரேலும் ஏற்று, இஸ்ரேல் பாலஸ்தீன ஆஸ்லோ உடன்பாடு யாசர் அராபத்- இட்சாக் ராபின் மத்தியில் ஏற்பட்டதை ஹமாஸ் விரும்பாமல் குண்டுவெடிப்புகளை நடத்தி கவனத்தை ஈர்த்தது. பாலஸ்தீன அமைப்பான பிஎல் ஓ வில் சேர்ந்த பல அமைப்புகளுடன் தானும் ஒன்றாக சேராமல், வெளியிலிருந்து தனது இராணுவ பலத்தை காட்டுவதாகவே அதன் தொடர் செயல்பாடுகளை, இன்றளவுவரை ஹமாஸ் வைத்துக்கொண்டுள்ளது.

ஹமாசை 1997ல் பயங்கரவாத இயக்கமாக அமெரிக்கா அறிவித்தது. இதுவரை 12 நாடுகள் மட்டுமே அதை வெளிப்படையாக ஏற்றுள்ளன. இந்தியா அறிவிக்கவில்லை. விடுதலை இயக்கமாகவும் அதனை ஏற்கவில்லை. பி எல் ஓ வுடன் மட்டும்தான் இந்தியா உறவுகளை வைத்துள்ளது.

ஹமாசை அழித்து ஒழிப்பதை இஸ்ரேல் பிரகடனப்படுத்திக்கொண்டு, இந்தப் போரை நடத்தி வருகிறது. பாலஸ்தீனிய ஆயிரக்கணக்கான குழந்தைகள் உட்பட தினந்தோறும் உயிர்பலிகள், உடைமை நாசங்களை இஸ்ரேல் ஹமாஸ் ஒழிப்பு பெயரில் செய்து வருகிறது. இதை தடுக்கவேண்டிய நிர்ப்பந்தம் அமெரிக்காவிற்கும் ஏற்பட்டுள்ளது. இந்தியா இன்னும் pro active ஆக இருக்கலாம்.

ஹமாஸ் ’அரசாங்கத்தை’ காசா பகுதியில் நடத்தி வருகிறது. தனக்கென பிரதமரையும் அமைச்சரவையும், இராணுவ தளபதிகளையும் வைத்துக்கொண்டுள்ளது. அரசியல் வழிகாட்டலுக்கு 15 பேர்கொண்ட பொலிட்ப்யுரோ ஒன்றை வைத்துக்கொண்டுள்ளனர். பொலிட்ப்யுரோவை சுரா என்கிற கவுன்சில் உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கின்றனர். ஆட்சி அல்லாவின் பெயராலான இஸ்லாமிய ஷரியத் சட்டப்படியிலான ஆட்சி எனச் சொல்லியுள்ளனர். மக்கள் குறிப்பாக பெண்கள் ஷரியத் சட்டங்களை பின்பற்றுகிறார்களா எனப் பார்த்து முறைப்படுத்திட கண்காணிப்பு குழுக்கள் அமைத்துள்ளனர். காசா பகுதி 360 சதுர கி மீட்டர் நிலம்தான் உள்ளது. 22 லட்சம் மக்கள் அங்கு கான்யுனிஸ், காசா நகரம், ராபா போன்ற பகுதிகளில் வசித்து வருகிறார்கள்.

ஹமாஸ் தனது சொந்த வரி திட்டங்களைக்கொண்டு நலத்திட்டங்களை சமாளித்து வருகிறது. இராணுவ போர்க்களன்களுக்கு ஈரான், துருக்கி, சிரியா

உதவி கிடைப்பதாக குற்றச்சாட்டும் இருக்கிறது. இந்த சிறிய நிலப்பரப்பில் இருந்துகொண்டு ராக்கெட் ஏவுதலைக்கூட அவ்வமைப்பினர் செய்துவருகின்றனர்.

பாலஸ்தீனத்தில் இஸ்லாமிய அரசு என்கிற கனவை அவர்கள் சுமந்துகொண்டு போராடிவருகின்றனர். அவர்கள் பயங்கரவாத அமைப்பா- ஆயுதம் தாங்கிய போராட்டத்தை மேற்கொள்ளும் விடுதலை அமைப்பா என்ற விவாதங்கள் நடந்துகொண்டே இருக்கின்றன. இஸ்ரேல்- பாலஸ்தீன பிரதேச பிரச்சனையின் தீர்வு போர்வழி தானா- ஆயுத வழிதானா என்பது பெருங்கேள்விக்குரிய ஒன்று. இதில் அப்பாவி மக்கள் பெயரை சொல்லி ஆயுதம் ஏந்துபவர்களால் அவர்கள் எங்கே நிறுத்தப்படுகிறார்கள் என்பதும் கேள்விக்குரிய ஒன்றே.

ஆயுத வழி அனுபவத்தையெல்லாம் கணக்கில்கொண்டு, ராஜீய பேச்சுவார்த்தை மூலம் செயல்பட்டு வரும் பி எல் ஓ என்கிற அமைப்பை- அதற்கு கொடுக்கப்பட்டுள்ள அங்கீகார அதிகார எல்லையை மேம்படுத்துவது காலத்தின் தேவையாகப்படுகிறது. அப்பாவி மக்களின் வாழ்க்கைக்கு ஆயுத வழி உறுதியான நண்பனாக இருக்காது என்பதே உலக அனுபவம்.

6-11-2023

The Two Documents of Hamas link is given

1. https://palwatch.org/.../hamas%20new%20policy%20document...

2.

https://avalon.law.yale.edu/20th_century/hamas.asp

Hamas Islamic Resistance Movement 1988 Covenant issued on 18th Aug 1988

Article Twelve:

Nationalism, from the point of view of the Islamic Resistance Movement, is part of the religious creed. Nothing in nationalism is more significant or deeper than in the case when an enemy should tread Moslem land. Resisting and quelling the enemy become the individual duty of every Moslem, male or female. A woman can go out to fight the enemy without her husband's permission, and so does the slave: without his master's permission.

Nothing of the sort is to be found in any other regime. This is an undisputed fact. If other nationalist movements are connected with materialistic, human or regional causes, nationalism of the Islamic Resistance Movement has all these elements as well as the more important elements that give it soul and life. It is connected to the source of spirit and the granter of life, hoisting in the sky of the homeland the heavenly banner that joins earth and heaven with a strong bond.

nov 4

The Age of Information and Digitalisation make people to move away more and more physically and keep them closer virtually

Com Namari

nov 4

Buddha taught so thro Dammapada

O Monks, know that everything that lives also dies. Everything has a cause. When the cause disappears the effect also disappears. Things that appear permanent are in reality temporary. They will also pass away.

What appears to have reached the highest point of glory is bound to fall. Where there is a beginning there is also the end. Where there is unity there is also separation. Where there is life there is death

nov 3

அலிகார் ‘வரலாற்று ஆய்வாளர் சொசைட்டி’ சார்பில் துலிகா கொணர்ந்த முக்கிய புத்தகங்களில் ஒன்றுதான் Religion in Indian History. தேவி பிரசாத், இர்பான், சுவிரா ஜைஸ்வால், பருண் தே , ராமகிருஷ்ணா உள்ளிட்ட 15 அறிஞர்கள் எழுதிய கட்டுரைகள்.

மார்க்சிய வரலாற்றாய்வாளர் இர்பான் ஹபிப் எடிட் செய்து அறிமுகவுரையும் எழுதியுள்ளார். இங்கு இர்பானின் அறிமுகத்தில் இடம் பெற்றுள்ள Religion and Caste என்கிற விவாதப்பகுதி மட்டும் சாரமாக இங்கு தரப்படுகிறது.

இந்திய சமூகத்தின் முக்கிய அடையாளமாக caste இருக்கிறது. சாதி என்றாலே அது படிநிலைகளுடன் வருவது. ஒரு சாதியின் படிநிலை எது என்பதில் வேறுபாடுகள் இருக்கலாமே தவிர, ‘படிநிலை’ தன்மை என்பதில் இல்லை.

அடுத்த முக்கியமான கேள்வி இந்துயிசம் குறிப்பாக பிராமணியத்திற்கும் சாதிக்குமான தொடர்பு. இரண்டும் தொடர்புடையன என்பதில் சந்தேகமில்லை. ஆனால் பிராமணியம் உருவாக்கியது தானா சாதிகள் என்பது கேள்விக்குரிய ஒன்று. இங்கு இர்பான் எழுதியிருப்பது:

It would be certainly foolish to deny the connection and interaction between the two. The question is whether the evolution of the caste system could not have been largely autonomous or separate process, which began to germinate appropriate justifications and theoretical rules within brahminical codes only ex post facto.

பிறப்புவாரி தொழில், அகமணம் என்கிற சாதியின் அடிப்படைகள் - occupational fixity, endogamy- வேத பிரதிகளில் இல்லை. இன்னும் இர்பான் சொல்கிறார் the term Jati , the real unit of the caste system has not been traced in the Vedic corpus. Rigveda 9.112 describes diverse occupations for live with no suggestion of hereditary constraint

இதே முடிவிற்குத்தான் மார்க்சிய அறிஞர் தாமோதரனும் தனது ஆய்வில் வந்திருந்தார்.

அடுத்து புத்தர் பற்றி இர்பான் பேசும்போது, அவர்களின் சாக்ய குலமும் கலப்பற்ற unmixed descent ஆகவே இருந்தது. இன்னும் சொல்லப்போனால் அப்போது

சத்திரியர்களிடமே, பிராமணர்களைவிட அதிக அகமண முறை காணப்பட்டது- a greater espousal of endogamy on the part of the Kshatriyas than the Brahmanas.

இந்தப் பகுதியில் இர்பான் தனது ஊக அடிப்படையில் கீழ்கண்ட முடிவிற்கு வருவதைக் காண்கிறோம்

One can fairly conclude that the caste system arose not out of an overbearing and hugely infecting priestly ideology of purity, but out of internal social processes in which economic and political changes played a major role.

தோழர் தாமோதரனும் இந்த முடிவிற்குத்தான் தன் ஆய்வில் வந்திருந்தார்.

இர்பான் வெளிப்படையாக பேசுகிறார். அதுவும் ஊகமாகத்தான் வைக்கப்படுகிறது.

It seems particularly doubtful if the evolution and spread of the caste system can be attributed primarily to Brahminical inspiration…the kingdom of Magadha and then Mauryan Empire may have played as important a part in its spread as any priesthood or monastic order.

அடுத்த முக்கிய கருதுகோள் செய்தியாக இர்பான் புத்தர் குறித்து தருகிறார். The Buddha's sermons about morality in worldly life adopt a curiously neutral attitude towards caste- neither endorsement nor rejection.

அசோகர் கல் பொறிப்புகளில் வர்ணா சாதி குறிப்பிடப்படாததையும் இர்பான் சொல்கிறார். இர்பான் தன் முடிவாக கீழ்கண்ட வரிகளையும் தந்துள்ளார்

Both Buddhism and Jainism, by their theories of life cycles based on karma, the doctrine of ahimsa provided an ideological underpinning for the caste system that was , perhaps, far more potent than the mythical purusha sacrifice of Vedic tradition.

அடுத்து இர்பான் எழுதுவதை கவனிப்போம். புத்தம் தான் சாதிகளின் நல்ல விளைநிலம் என்ற கருத்திற்கு அவர் வருகிறார். சமஸ்கிருதத்தைவிட பிராகிருதம் தான் அதனை அதிகம் பேசியது என்கிறார். பிராமணியம் என்பது மட்டுமே சாதிகளின் உருவாக்கத்திற்கு காரணமாகவில்லை என்பதை எழுதுகிறார்.

The fact that the caste system obtained much of its classic shape and universality in India during the time that Buddhism spread over the country, and Prakrit not Sanskrit, was the major language of inscriptions represents a synchronism which might not be entirely accidental. It is not the intention here

to assert that Buddhism alone generated the entire process of caste transformation of the various regional societies within India.

Complex political, economic and cultural forces were probably at play, which we cannot perhaps as distinctly identify as we could like to. But the point made here is that it was no simple process of Brahminisation. Buddhism and Jainism also contained ideological baggage with which the caste system could be explained, justified and lived with

இஸ்லாமியர் ஆட்சியில் மதம் என அடுத்து இர்பான் பேசிச் செல்கிறார். இஸ்லாமியர் ஆட்சியில் சாதிகள் என்பது குறித்து சொல்லப்படவில்லை. வலது அறிஞர்கள் தங்கள் ஆய்வுகளில் இன்றைய 'சாதி இறுக்கத்தை' முஸ்லிம் பிரிட்டிஷ் ஆட்சி காலத்தில் தேடுகின்றனர். திராவிட ஆய்வுகள் சனாதனம்= பிராமணியம்= சாதிகள் = ஏற்றத்தாழ்வுகள் என சொல்கின்றன. அதில் பொருளாதார உழைப்பு பிரிவினை அம்சங்கள் , அரசு உருவாக்கத்தின் பங்களிப்புகள் போதுமான ஆதாரங்களாக கொள்ளப்படுவதில்லை.

இங்கு தமிழ் பொது புத்தியில் இருப்பது புருஷ சூக்தம் பேசும் தலையிலிருந்து -காலிலிருந்து வர்ண பிறப்பு என்பது மட்டுமே. இர்பான் ஆய்வுகள் தமிழகத்தில் கண்டு கொள்ளப்பட்டதாக தெரியவில்லை. அதைக் கொண்டு போகவேண்டியவர்கள் செய்திருந்தால் , சிறிய அளவாவது போயிருந்திருக்கலாம்.

Nov 2

## இந்தியாவின் பாலஸ்தீன கொள்கை

இந்தியாவின் பாலஸ்தீன கொள்கை விரிவான ஆய்விற்குரிய ஒன்று. பாலஸ்தீனியர்களுக்கு நாடு என்கிற நிலைப்பாட்டைத்தான் இந்தியா எடுத்தது. 1974ல் பி எல் ஓ வை அங்கீகரித்த அரபியர் அல்லாத நாடு என்றால் அது இந்தியாதான். யாசர் அராபத்துடன் நல்லுறவை பேணும் தொடர் நடவடிக்கைகளை இந்திரா அம்மையார் ஆட்சி எடுத்தது. பாலஸ்தீன அரசாங்கம் என்பதைக் கூட 1988ல் இந்தியா அங்கீகரித்து தூதரக உறவை உருவாக்கியது. காசாவில் இந்திய பிரதிநிதி அலுவலகத்தையும் 1996ல் திறந்தது. பின்னர் இது ரமல்லா பகுதிக்கு மாற்றப்பட்டது.

அய்நா பொதுச்சபை 53வது அமர்வு பாலஸ்தீனியர் சுய நிர்ணய உரிமை தொடர்பான தீர்மானத்தை இந்தியா ஆதரித்து வாக்கு செலுத்தியது. இஸ்ரேல் எழுப்பிய சுவர் குறித்த தீர்மானத்திலும் 2003ல் இந்தியா பாலஸ்தீனம் பக்கம் இருந்தது. அதேபோல 2012 நவம்பரில் அய்நா தீர்மானமான பாலஸ்தீனத்திற்கு வாக்குரிமை இல்லா 'non member observer state' என்பதற்கும் இந்தியா ஆதரவாகவே நின்றது. அய்நாவில் பாலஸ்தீன கொடி என்கிற பிரச்சனையிலும் செப் 2015ல் இந்தியா பாலஸ்தீனம் பக்கமே நின்றது. ஆசிய ஆப்ரிக்க 2015 மாநாட்டிலும் பாலஸ்தீன பாண்டுங் பிரகடனத்திலும் இந்தியா உரிய பங்காற்றியது.

இந்திய குடியரசு தலைவர் என்கிற வகையில் முதல் முறையாக திரு பிரணாப் முகர்ஜி அவர்கள் அக்டோபர் 2015ல் பாலஸ்தீனம் சென்றதும், பிரதமராக மோடி அவர்கள் பிப்ரவரி 2018ல் பாலஸ்தீனம் சென்றதும் இருதரப்பு உறவுகளை மேம்படுத்தவே என்று அறிவிக்கப்பட்டது. பலமுறை பாலஸ்தீன அதிபரான முகம்மது அப்பாஸ் அவர்களை , சர்வதேச அமர்வுகளின் இடைவெளியில் இந்திய பிரதமர் உட்பட பிரதிநிதிகள் சந்தித்து தங்கள் ஆதரவையே தந்துள்ளனர். கடந்த 2017ல் அப்பாஸ் அவர்களும் டெல்லியில் குடியரசு தலைவர், துணைத்தலைவர், பிரதமரை சந்தித்து பேசியுள்ளார்.

இந்தியா பாலஸ்தீன் இடையே ஒரு ஜேசிஎம் Joint commission Meeting நடைபெறவும் செய்தது.

காசாவில் ஜவஹர்லால் நேரு பெயரில் நூலகம் ஒன்றை அமைக்கவும், மகாத்மா காந்தி மாணவர் செயல் மற்றும் நூலக பணிகள் கூடம் அமைக்கவும், தொழில்நுட்ப கல்லூரிகள் சில அமைக்கவும் இந்தியா உதவியது. நேரு பெயரில் ஆண்கள் மேல்நிலைப்பள்ளி, பெண்கள் மேல்நிலைப்பள்ளி இந்தியா சார்பில் உருவாக்கித் தரப்பட்டன.

அல்குட் பல்கலை சேவைகள், மற்றும் பாலஸ்தீனை டிஜிட்டல்மயமாக்குதல் ஆகியவற்றில் இந்தியர் உதவியை பாலஸ்தீனியர் வரவேற்றனர். பல இடங்களில் தொழிற்கல்விக்கூடங்கள் அமையவும் இந்தியா துணை நின்றது.

பெத்தலஹேம் பகுதியில் super speciality Hospital அமைய இந்தியா பேருதவி செய்தது. 'துராதி' என்கிற பாலஸ்தீனிய பெண்கள் மேம்பாட்டு திட்டத்தில் இந்தியாவிற்கு பங்குண்டு. பாலஸ்தீனிய Heritage products Marketing என்பதற்கும் இந்தியா உதவியது. ரமல்லாவில் பிரிண்டிங் பிரஸ் நிறுவிட அதன் தொழில்நுட்ப மேம்பாடுகளுக்கும் இந்தியா பக்க பலமாக நின்றது. விவசாயம், மருத்துவம், இளைஞர் நலன் விளையாட்டு, தகவல் தொழில் நுட்பம் போன்ற பலவற்றில் புரிவுணர்வு ஒப்பந்தங்கள் போடப்பட்டுள்ளன.

ரமல்லா மைதானம் ஒன்றில் காந்தி சிலை ஒன்று நிறுவப்பட்டது. இந்திய உணவுவகை ஓட்டல்கள் கூட ரமல்லாவில் திறக்கப்பட்டன. உணவு திருவிழாவும் கூட அனுசரிக்கப்பட்டது. இன்னும் ஏன் பாலஸ்தீனம் யோகா தினம் அனுசரிக்கக்கூட தன் அனுமதியை தந்தது.

சமீப ஆண்டுகளில் இஸ்ரேல் உடன் இருதரப்பு உறவுகளை இந்தியா குறிப்பாக தொழில்நுட்பம், பாதுகாப்பு துறை சார்ந்து மேற்கொண்டு , உறவுகள் பலப்பட்டு வரும் சூழலில் இந்தியா நிதான போக்கை கடைப்பிடிப்பதாக காட்டத்துவங்கியது. இஸ்ரேல் பாலஸ்தீன் என்கிற இரு நாட்டு கொள்கை என்பதை - இஸ்ரேல் போலவே பூரண அங்கீகாரம் பெற்ற பாலஸ்தீன் நாடு என்பதை - இந்தியா தொடர்ந்து சொல்லி வந்தாலும், அமெரிக்க வழி இஸ்ரேல் சாய்வு அதிகமாகி வருவதை பலரும் சுட்டிக்காட்டி வருவதைக் காண்கிறோம். சமீபத்திய வாக்கெடுப்பில் இந்தியா நடுநிலை என்பது , இந்தியாவின் நிலைப்பாட்டில் மாற்றமா என்கிற கேள்வியை விமர்சனத்தை அதிகப்படுத்தியது.

IMEC என்கிற India Middle East Europe Economic Corridor என்கிற மிகப்பெரிய பொருளாதார மேம்பாட்டு வாய்ப்பை சீர்குலைக்கவே ஹமாஸ்- ஈரான் முயல்வதாக அமெரிக்க நாட்டின் அதிபர் பேசி வருகிறார். ஹமாசை அராபட்டிற்கு எதிராக வளர்த்துவிட்டதே இஸ்ரேலிய உளவுத்துறைதான் என்கிற குற்றச்சாட்டும் இருக்கிறது. ஹமாசின் தலைவர்களில் பலர் 'ஸ்காலர்கள்' - அறிஞர்கள்- நிபுணர்கள் என்ற செய்தி இருந்தாலும் மதவாத பயங்கரவாத முத்திரையும் நிழலும் அவர்கள் மீது படிந்துள்ளது.

இஸ்ரேலுக்கான நியாயங்கள் என்னவாக இருந்தாலும், ஹமாஸ் பெயரைச் சொல்லி பல்லாயிரக்கணக்கான குழந்தைகளையும் பாலஸ்தீனியர்களையும், அவர்களுடைய அடிப்படை ஆதாரங்களையும் சீர்குலைப்பதை நியாய உணர்வு கொண்ட எவரும் ஏற்க முடியாது. குறைந்தபட்ச மானுட நெறிகளைக் கூட பின்பற்றாத கொடுமைகளையும் ஏற்கமுடியாது.

பயங்கரவாதம் குழுவின் இயக்கத்தின் சார்பில் வந்தாலும் 'விடுதலை' என்ற பெயரில் அதை நியாயப்படுத்த முடியாது. அதேபோல் அரசை காப்பது இஸ்ரேலியர் நலன் காப்பது என்கிற பெயரில் இராணுவ வழி பயங்கரவாதத்தையும் படுகொலைகளையும் ஏற்க இயலாது.

அய்நாவிற்கு சக்தியை அல்லது பலவீனத்தை கொடுப்பவை வீட்டோ அதிகாரம் பெற்ற நாடுகள் தான். ரஷ்யா உக்ரைனில் ஓராண்டாக போர் நடத்திக்கொண்டு அதனால் உபதேசிக்க முடியுமா எனத் தெரியவில்லை. உலகின் ஆயுத ஏஜெண்டாகவே நாட்டின் பொருளாதாரத்தை உயர்த்த முனையும் அமெரிக்காவிற்கும் உபதேசிக்கும் தார்மீக உரிமை இல்லாவிடினும், தீர்விற்கான அதன் தலையீட்டை அரபு நாட்கள் உட்பட பலர் நிராகரிக்கமுடியாது.

இந்தியா, இன்னும் கொஞ்சம் - சொந்த நாட்டின் நலன் -மேற்காசிய கொள்கை- geo political understanding என்பதையெல்லாம் தாண்டி, அப்பாவி மக்களின் உயிர்ப்பலிகளை தடுக்க சற்று கூடுதலாக வெளிப்படையாக pro active positions எடுக்கலாமோ- எனத் தோன்றுகிறது.

(Disclaimer- டிப்ளமசி குறித்த அறிவு எனக்கு கிடையாது- வால்ட்டர் லாகுவர் எடிட் செய்த Israel Arab Reader A Documentary History ல் இஸ்ரேல்- பாலஸ்தீன் தொடர்பாக

1880 துவங்கி வெளிவந்த  நூற்றுக்கணக்கான ஆவணங்களையும் நான் படிக்கவில்லை. 3000 ஆண்டுகள் அரபியர் வரலாறு குறித்து வந்துள்ள சில புத்தகங்களைக் கூட நான் படிக்கவில்லை. எட்வர்ட் செய்த் அவர்களின் the question of Palestine படிக்க நினைத்தும் செய்யவில்லை.  ராகவனின் நிலமெல்லாம் ரத்தம் என்கிற தொடர்கதை போன்ற ஒன்றையும், சில கட்டுரைகளையும் மட்டும் தான் பார்த்துள்ளேன்)

2-11-2023

nov 3

ஒரு நல்ல ஆசிரியன் கற்பிக்கும்போதுதான் படிப்பான். மாணவர்களுக்குப் படிப்பிப்பதற்காகப் படிப்பான்..மாணவர்களால் தான் வளரவில்லை என்று சொல்கிறவன் ஆசிரியனே அல்ல. ஆசிரியரின் ஆளுமை விருத்தியில் மாணவர்களுடைய பங்கு முக்கியமானது- பேரா கா சிவத்தம்பி

nov 2

கே தாமோதரன் இந்திய மார்க்சிய அறிஞர். இந்திய கம்யூனிஸ்ட் கட்சியில் செயல்பட்டவர். நாடாளுமன்ற மேலவை சென்றவர். ஜே என் யு ஆய்வு கூடத்தில் நேரம் செலவழித்தவர். ஸ்டாலினிசம் குறித்து விமர்சன பார்வை வைத்திருந்தவர்.

நியு லெப்ட் ரிவ்யூ இதழுக்காக அவர் தாரிக் அலிக்கு கொடுத்த பேட்டி பெரிதாக பேசப்பட்ட ஒன்று. டெல்லி பிபிஎச் இவரது Indian Thought, Man and Society in Indian Philosophy போன்றவற்றை வெளியிட்டுள்ளனர். முன்னது அளவில் பெரிய விரிவான ஒன்று. அடுத்த ஒன்று 100 பக்க அளவிலானது என்றாலும் சாரம் அடர்த்தி மிகுந்த ஒன்று.

'இந்திய தத்துவத்தில் மனிதனும் சமூகமும்' 1970 ல் எழுதப்பட்ட புத்தகம். ஆய்வு நூல். நான் படித்த பிரதி 2007 ஆம் ஆண்டில் பிபிஎச் வெளியிட்ட ஒன்று. வரலாற்றிற்கு முந்திய காலம், வேத உபநிடத காலம், பிராமணியம், இந்திய பொருள்முதல்வாதிகள், புத்தம் போன்ற பல அம்சங்களை தாமோதரன் தொட்டுக்காட்டி, அவற்றில் மனிதன் சமூகம் என்பது எப்படி புரிந்துகொள்ளப்பட்டுள்ளது- செல்வ வேறுபாடுகள் உருவானதற்குப் பின்னர் , உழைக்கும் பிரிவினர் அவர் உழைப்பில் வாழ்ந்து சிந்தனை செயல் கலை இலக்கியம் என உருவாக்கியவர் - அரசமைப்பு அவர்கள் காக்க விரும்பிய வேறுபாட்டுடன் கூடிய சமூக முறை என பல அம்சங்களை தாமோதரன் விவாதிக்கிறார்.

ரிக் பாடல்கள் பெரும்பாலும் சமூக, கலாச்சார, சமய ஆர்யர் வாழ்வின் பிரதிபலிப்புகள். அவர்கள் பஞ்சாப் பகுதியில் முன்னரே வாழ்ந்து வந்த பூர்வ குடிகளின் பழக்க வழக்கங்களையும் உள்வாங்கிக்கொண்டனர். ஆர்யர்கள் ஆரம்பத்தில் சொர்க்க வாழ்விற்கென என ஏதும் அறிந்திருக்க்வில்லை- சடங்குகள் செய்யவும் இல்லை.

ரிக் பாடல்களில் பல்வேறு தொழில்கள் இடம் பெற்றுள்ளன. தச்சர், கொல்லர், மரம் வெட்டுபவர், ஆயுதம் செய்வோர், தேர் செய்வோர், வேட்டைக்காரர், சோமபானம் தயாரிப்பவர், ஆடு மாடு மேய்ப்பவர், கவி பாடுவோர், மருத்துவர் ,

விவசாயிகள் என பலரும் ஒன்றாக இருந்ததாக தாமோதரன் ஊகிக்கிறார். இதற்கு ஒன்றாக இருப்போம் அதுவே மகிழ்ச்சி பலமும் கூட. சிந்தனை செயலில் ஒன்றாவீர் என்கிற பாடல்களை அவர் காட்டுகிறார்.

பின்னர் தனியார் உடைமை என்கிற தன்மை பலப்படும் காலத்தில் அவர்கள் நால் வர்ணங்களாக பிரிகின்றனர். Tribal கூட்டு வாழ்க்கை தன்மையில் உடைவு ஏற்படுகிறது. தாமோதரன் எழுதுவது

The division of labour, the rise of private property and the formation of classes destroyed the harmony and collective awareness of tribal life. There was a widening gulf between the self and social environment.

இங்கு மார்க்ஸின் அந்நியமாதல் சாயைக்குரிய கருத்தை தாமோதரன் கொணர்வதை பார்க்கிறோம்.

ஆத்மா ஆன்மா பிராணன் பிரக்ஞை என பல பெயர்களில் விவாதிக்கப்படுபவை குறித்து - இந்த self consciousness என்பதை உபநிடதங்கள் பலவாறு பேசுவதாக விளக்குகிறார் தாமோதரன். கதா உபநிபடதம்

Beyond the senses is the mind, above the mind is its essence intelligence, beyond intelligence is the great self, beyond self is the unmanifest என்று சிந்தித்து செல்வதை தாமோதரன் முன் வைக்கிறார். உடல் தேர் என்றால் புத்தி அதன் தேரோட்டி, மனம் அதை ஆள்வது. உணர்விலிருந்து புத்தியிலிருந்து விடுபட்ட சுயம் என்று அப்பாடல்கள் பேசுகின்றன.

ஒரு self க்கு மற்றொரு self object ஆக இருக்கிறது. எனவே இரட்டைத்தன்மை வந்துவிடுகிறது. இதை பயிற்சியால் அந்த சுயம் கடக்கவேண்டும்.பிரம்ம நிலை எய்தல் தீர்வு என அவர்கள் பேசிக்கொண்டனர். Individual self is inalienable part of the all-pervading universal self- Inmost atman of the individual becomes synonymous with the all pervading Brahman என்ற சிந்தனையை உபநிடதங்கள் எட்டின. Subject object விடுபட்ட நிலை- fundamental oneness என்று இதை அவர்கள் உணர்ந்தனர் என்கிறார் தாமோதரன். சமூக மோதல் பதட்டங்களுக்கான தீர்வை அவர்கள் சொல்லிக்கொண்டிருந்தாலும், பிளவுண்ட் சமூகம் அதை மேலும் மேலும் ஆழ அகலப்படுத்தியே செல்லலானது.

இந்த தாகத்தில் தான் கீழ்கண்ட பாடல் உருவாகியிருக்கலாம் என தாமோதரன் ஊகிக்கிறார். அப்பாடல் அசத்தோ மா சத் கமயா. அதாவது

From untruth lead me to truth, from darkness to light, from death lead me to immortality

தோழர் தாமோதரனின் முதல் 20 பக்கத்தை மட்டும்தான் இங்கு தொட்டுக்காட்டியுள்ளேன். வாய்ப்பிருக்கும்போது வேறு செய்திகளை பார்ப்போம்

nov 1

வள்ளலார் குறித்து ஏராள நூல்கள் எழுதப்பட்டுள்ளன. ஊரன் அடிகள் பெரிதும் உதவுவார்.

தோழர் கோவி. ஜெயராமன் தொலைத்தொடர்பு குடும்பம் சார்ந்தவர். கடலூர் வாழ் கவிஞர். தமிழ் ஆர்வலர். தொழிற்சங்கத் தலைவர். கலை இலக்கிய அமைப்புகளுடன் நல்லுறவு கொண்டவர். கம்பன் மீது பற்றும், வள்ளலார் குறித்து தொடர்ந்து பேசியும் வருபவர்.

தோழர் ஜெயராமன் எழுதிய 'சனாதன மறுப்பாளர் வள்ளலார்' கடந்த அக்டோபரில் வெளியான புத்தகம். தோழர் சி மகேந்திரன் கலந்துகொண்டு பெண்ணைப் பதிப்பகத்தால் வெளியிடப்பட்ட நூல். தோழர் பணிக்கு நல் வாழ்த்துகள்.

தமிழக கவர்னர் பெருமகனார் வள்ளலாரை சனாதனத்தின் பக்கம் வைத்து பேசிய நிலையில், அதற்கான எதிர்வினையை உரிய தரவுகளுடன் நூலாக எழுதி தரவேண்டும் என்ற உந்துதலால் இந்த ஆக்கத்தை செய்துள்ளதாக ஆசிரியர் சொல்கிறார்.

'சனாதனம்' என்பதை தான் அறிந்த, உணர்ந்த வகையில் தொட்டுக்காட்டிவிட்டு, வள்ளலாரின் சிந்தனைப்பாதை குறித்து விரிவாக பேசியுள்ளார் ஆசிரியர். வள்ளலார் வாழ்க்கை குறிப்புகள் ஓரளவிற்கு அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது. கார்ல் மார்க்ஸ் காலத்தவர் வள்ளலார் என்கிற ஒப்பீடும் பேசப்பட்டுள்ளது.

வள்ளலாரின் ஜீவகாருண்யம் அனைவரையும் சமமாக பாவிக்கும். சனாதனம் ஏற்ற இறக்கமாக மத துவேஷ சாதி கண்கொண்டு பார்க்கும் என்ற வேறுபாட்டை ஆசிரியர் காட்டியுள்ளார். வள்ளலாரின் ஜீவ காருண்ய விளக்கத்தை மேற்கோளாக எடுத்தாண்டுள்ளார்.

" பசியினால் வருந்துகின்றவர்கள் எந்த தேசத்தாராயினும், செய்கையாராயினும் அவர்களின் தேச ஒழுக்கம், சமய ஒழுக்கம், சாதி ஒழுக்கம், செய்கை ஒழுக்கம் பேதித்து விசாரியாமல் எல்லா சீவர்களிடத்தும் கடவுள் விளக்கம் பொதுவாய்

விளங்குவதை அறிந்து பொதுவாகப் பார்த்து அவரவர் ஒழுக்கத்திற்கு தக்கபடி அவர்கள் பசியை நிவர்த்தி செய்வதே ஜீவகாருண்யம்"

திருவருட்பாவில் ஆசிரியர் தேர்வு செய்து 18 பாடல்களையும் கொடுத்துள்ளார். வள்ளலாரின் வாசகமான

கருணையிலா ஆட்சி கடுகி ஒழிக

அருள் நயந்த நன்மைகள் ஆள்க என்பவை இன்றும் மக்களாட்சி காலத்திற்கும் பொருத்தமான வரிகள்

வாய்ப்புள்ளவர் இந்நூலை வாசித்துப் பார்க்கலாம்.

nov 1

வ ரா திருமணம் குறித்து...

அமரர் வ ரா அவர்களின் வாழ்க்கை சரித குறிப்புகளை சு வேங்கட

ராமன் எழுதியுள்ளார். 1993ல் சாகித்ய அகாதமி வெளியிட்டது.

வரா பாரதியை அடியொற்றி விடுதலை, பெண் விழிப்புணர்வு, தமிழ் மொழி, சமூக மாற்றம் குறித்து சிந்தித்தவர்- எழுதியவர். வ ராவின் மகாகவி பாரதியார் பலர் அறிந்த படைப்பு.

மேற்குறிப்பிட்ட வரா குறித்த புத்தகத்தில் அவரது மணவாழ்க்கை குறித்த செய்தி பக் 12-14 ல் இடம் பெற்றுள்ளது.

இலங்கையில் வீரகேசரியில் பணியாற்றிக்கொண்டிருந்த வேளை வ ரா அங்கு பஞ்சாபியைத் தாய்மொழியாகக் கொண்ட புவனேசுவரி அம்மையாரைத் தன் நாற்பதாம் வயதில் திருமணம் செய்துகொண்டார்.

“ இந்த திருமணத்தை அந்த நாட்களில் அவருடைய நெருங்கிய நண்பர்களும், உறவினர்களும் மனமார ஏற்றுப்பாராட்டினார்கள். ஒரு சிலர் முகஞ்சுளித்திருக்கலாம். ஆனால் தமிழறிஞரும் தேசபக்தருமான வ உ சிதம்பரம் பிள்ளை, வரா வின் திருமணத்தை கேலிசெய்ததுப்போலப் செய்தி வெளியிட்டுள்ளார். அதை மறுத்து வராவின் சீர்திருத்த திருமணச்செயலை ஆதரித்து ராய சொக்கலிங்கத்தின் ஊழியன் 15-5-1936 பக் 8 ல் செய்தி வெளியிட்டுள்ளார்.

வ ரா தம் நாற்பது வயதில் பஞ்சாபி சிறுமி ஒருத்தியை மணந்துகொண்டார் என்பதைக்கூறி, அய்யங்காருக்கும் அவருடைய பஞ்சாபி மனைவியாருக்கும் பிறக்கும் ஆண் மக்களை நான் இன்ன அய்யங்கார் என்று கூப்பிடுவதா, அல்லது சுயமரியாதைத் தோழர்களைக் கூப்பிடுவது போல வெறும் பெயர்களை மட்டும் சொல்லிக்கூப்பிடுவதா என்று கவலைப்படுகிறார் வ உ சி அவர்கள். கலியாணம் இருவர் தனியுரிமை. இந்தச் சந்தர்ப்பத்தில் ஏன் சாதிப்பட்டத்திற்காகக் கவலைப்படுகிறார் வ உ சி. சாதிச்சனியனே வேண்டாமென்றுதானே பஞ்சாபிப் பெண்ணை மணந்திருக்கிறார் வ ரா.

திரு சிதம்பரம் பிள்ளை போன்ற தேசாபிமானிகள், தலைவர்கள், தியாகிகள் கூடச் சாதியைப் பிடித்துக்கொண்டிருப்பார்களேயானால், தேசத்தின் தலைவிதியையும், சாதிப்பேயின் நற்காலத்தையும் என்னெவென்பது? (ஊழியன் துண்டுபட்ட நினைவுகள் துணைத் தலையங்கம்) “